# முன்னுரை

பொதுமக்களை அழுத்தி அவர்கள் தோள்மீது சவாரி செய்துகொண்டிருக்கும் ஒரு கூட்டத்தார் மிகப் பழங்கால முதல் உலக முழுவதும் பரவி வாழ்ந்து வருகிறார்கள். இவர்கள் புரோகிதர் எனப்படுவர்.

இவர்கள் மரங்களில் முளைக்கும் புல்லுருவியும், பயிர்களினிடையே பெருகி வளரும் களையும், ஆடுமாடுகளின் இரத்தத்தை உறிஞ்சி வாழும் உண்ணியும் போன்றவர்கள் என்பது, நெடுநாட்களாக மக்கள் அறிந்துள்ள உண்மையாகும்.

மேற்குத் தேசங்களில் கத்தோலிக்க கிருத்தவமதம் தலை எடுத்தபோது, இப் புரோகிதக் குழுவுக்கு மாறாக மாட்டின் லூதர் என்னும் செர்மானியர் புரட்சிக் கருத்துக்களைப் பொதுமக்களிடம் விதைத்தார்; விதை விரைவிலே முளைத்துச் செழித்து வளர்ந்ததுகண்டு வாட்டமுற்ற அந்நாட்டுப் புரோகிதர் அடக்குமுறையால் அழிக்கப்பார்த்தும் பயனிலதாயிற்று. நமது நாட்டிலும் புரோகிதத் தன்மையை எதிர்த்து புரட்சி மதங்கள் பல தோன்றின. புத்தம், சைனம், வீர சைவம், ஆகிய கொள்கைகள் புரோகித எதிர்ப்புக் கொள்கைகளாக எழுந்தனவே. அவை, காலத்தில் புரோகிதர் ஆட்சியின்முன் வலிகுன்றி மறைந்தன. பழைய உணர்ச்சியைப் பின்பற்றியே இன்று, தன்மான உணர்ச்சிக்கட்சி தோன்றி இப்புரோகிதத்

தொல்லையை ஒழிக்க முயன்று வருகின்றது. அவ்வியக்கத்திற்குத் தலைமைதாங்கி நிற்கின்றவரை இவ்விருபதாம் நூற்றாண்டின் மாட்டின்லூதர் என்றே கூறலாம். நம் முன்னோர் முயன்று புரோகிதரின் சூழ்ச்சியால் தோல்வி கண்டனராயினும் இன்றைய லூதர் வெற்றிகாணவேண்டும்—காண்பார் என்பதே எமது அவா.

இச்சிறுநூல் உலக முழுமையிலும் காணப்பட்ட—காணப்படுகின்ற புரோகிதப் புரளியை, பூசாரிக் கொடுமையை சரித்திர சான்றுகொண்டு விளக்குகின்றது.

The Brahmans had grown to power side by side with kings and chieflains down to the present day. Brahmanism preserves its power through all wreck of ages--possibly as a mere phantom of its shadow—a titerary History of India p. 148 R. W. Frazer.

See the priests in the temples how they try to fleece the poor worshipper, go to the Banks of the Ganges, and you will see the pandits refusing to perform some ceremony till the unhappy villager pays up, Whatever happens in the family a birth, marriage or death the priest steps in and payment is required —Glimpses of world history p. 203—Pandit Neru.

சென்னை
15—2—49

ந. சி. க.

# புரோகிதர் ஆட்சி!

## தோற்றுவாய்

பார்ப்பார் என்னும் சொல் தென்னிந்தியாவில் கோயிற் பூசை புரியும் குலத்தினரைக் குறிக்க வழங்குகின்றது. பார்ப்பார் என்னும் பெயர் கோயில்களை மேல் பார்த்துத் தெய்வத்துக்குப் பலி செலுத்துகின்ற மக்களைக் குறிக்க வழங்கிய காரணப்பெயர். ஆகவே முற்காலத்தில் இது ஒரு சாதியினரைக் குறிக்க வழங்கவில்லை. பிற்காலங்களிலேயே இது ஒரு கூட்டத்தினரைக் குறிக்க வழங்குவதாயிற்று. பார்ப்பார் என்னும் கூட்டத்தினர் ஒரு பொதுத் தொடக்கத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர். கோயில்களை மேற்பார்த்த பல்வேறு வகுப்பினரின் தொகுதியினரே இன்றைய பார்ப்பனர் என்னும் குலத்தினராவர்.

தமிழ் நாட்டில் காணப்படுவதுபோலவே உலகில் எல்லாப் பாகங்களிலும் பார்ப்பார் இருந்தனர்; இருக்கின்றனர். அவர்கள் குருமார் எனப்படுகின்றனர். பார்ப்பாருக்குப் பூசாரிகள் என்பதும் இன்னொரு பெயர். இது தெய்வத்துக்குப் பலியிடுதல் காரணமாக உண்டான பெயர். பூசாரி என்பது பூசை என்னும் அடியாகப் பிறந்தது. பூசைக்கு மூலம் புசி. பூசாரி என்பதற்குத் தெய்வத்தைப் புசிப்பிப்பவன் என்பது பொருள். பூசை என்பதை வடசொல் எனக் கூறுவர் சிலர். வடமொழியிலுள்ள திராவிடச் சொற்கள் எனக் கிட்டல் என்பார் காட்டிய பல சொற்களுள் பூசை என்பதும் ஒன்று.

முற்காலத்தில் இத்தாலியினின்றும் வந்த தத்துவ போத சுவாமி (Robert de Nobile) வீரமாமுனிவர் (Constantius Beschi) முதலியோர் தம்மை உரோமா புரிப் பார்ப்பார் எனக் கூறினர். வீரமாமுனிவரின் சமை யற்காரர், பரிசாரகர் முதலினோர் பார்ப்பாராகவே இருந் தனர்.

இந் நூல் இவ்வுலக முழுமையிலும் பார்ப்பார் எவ் வாறு மக்கட் சமூகத்தாரிடையே முதன்மை பெற்று மக்களை நசுக்கினர்கள் என்பதை ஆராய்ந்து கூறுகின்றது.

## இரு ஆட்சிகள்

இவ்வுலகில் இரண்டு ஆட்சிகள் உண்டு; ஒன்று அரசன் ஆட்சி, மற்றது பார்ப்பார் ஆட்சி. பார்ப்பார் ஆட்சி அரசன் ஆட்சிக்குமுன் தொடங்கியதெனக் கருதப் படுகின்றது. ஒரு காலத்தில் பூசாரியே அரசனுமாக விருந்தான். கிழக்குத் தேசங்களில் அரச சின்னமாக விளங்கிய குடை முற்கால மழை பெய்விப்பவனுகிய (Rain-Maker) மந்திர வித்தைக்கார அரசனின் சின்னமே யெனக் கருதப்படுகின்றது. பின்பு இவ்விரு அதிகாரங்களும் பிரிந்து தனித்தனி தமது ஆளுகையை இவ்வுலகில் தொடங்கின. அரசன் தனது புய வலியினு லும் படைவலியினுலும் ஆண்டான். பார்ப்பார் புயவலி யையும் படைவலியையும் வேண்டவில்லை. வெளிப்பாடு (Oracle), கடவுள் எண்ணங்களை மக்களுக்கும் மக்கள் எண்ணங்களைக் கடவுளுக்குங் கூறுவதாகிய தரகு, கடவு ளரின் சீற்றத்தைப் பலிசெலுத்திப் புரியும் தணிப்பு, தம் சொற்களைக் கடப்பவர் மறுமையில் அடையும் துன்பு போன்ற சில கதைகளையும் தந்திரங்களையுமே வலிய ஆயு தங்களாகப் பயன்படுத்தினர். வில், வாள், வேல்களுக்கு

அஞ்சுவதிலும் பார்க்கப் பொதுமக்கள் இவ்வாயுதங்களுக்குப் பெரிதும் அஞ்சினர். முடிமன்னரே அவர் கால்களில் விழுந்தனர். இவ்வாறு பார்ப்பார் அரசரையும் குடிகளையும் ஆட்டுவிக்கும் வலிமை பெற்றார்கள். பார்ப்பார் ஆட்சியை ஒழிப்பதற்கு காலத்துக்குக் காலம் பலவாறு முயலப்பட்டது; ஆனால் அம் முயற்சிகள் பலிக்கவில்லை. அவர்கள் எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளிலும் மக்களின் தோள்மீது ஏறிச் சவாரி செய்திருக்கிறார்கள்[1].

## பார்ப்பார் சமயத்தில் எவ்வாறு இடம் பெற்றனர்?

பார்ப்பார் சமயத்தில் எவ்வாறு இடம் பெற்றார்கள் என விளங்கிக் கொள்வதற்குச் சமயத்தோற்றம் எவ்வாறு உண்டாயிற்று என நாம் முதலில் அறிதல் வேண்டும். சமயம் வானத்தினின்றும் வந்து இவ்வுலகில் தோன்றவில்லை. மக்களே அதனைத் தோற்றுவித்தார்கள். மரண பயம், தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் இயற்கை உணர்ச்சி என்னும் இரண்டு காரணங்களால் சமயம் உண்டாயிற்று. முதலில் மக்கள் வியப்பும் அச்சமும் விளைக்கக் கூடிய இயற்கைப் பொருள்களைக் கடவுளெனக் கொண்டு வழிபட்டார்கள். பின்பு அவர்கள் இறந்தவர்களின் உயிர்கள் ஆவியுடலில் வாழ்கின்றன வென்றும் அவை எல்லாத் தீமையையும் செய்யவல்லன என்றும் நம்பத் தலைப்பட்டார்கள். தமது பெற்றார், சுற்றத்தவர்களின் ஆவிகளுக்கு மரியாதை, உணவு, துதி செலுத்தினால் அவை தீமை விளைக்கமாட்டா எனவும் நம்பினார்கள். இதனால் இறந்தவர்

1. The old man of the church from age to age from land to land has ridden on the shoulders of humanity, and set at defiance all endeavours and all schemes to dislodge him—Popular History of priest craft in all ages and nations p. 96—William Howitt.

(தென்புலத்தார்) வழிபாடு உண்டாயிற்று. மிகக் கோப குணமுடைய ஆவிகள் இராக் காலங்களில் சிற்சில இடங்களில் தங்கி நிற்கின்றனவென்றும் அவைகளினின்றும் தப்புவதற்கு, மந்திரங்கள், பலிகள், தாயத்துக்கள் உதவி புரிகின்றனவென்றும் கொள்ளும் நம்பிக்கை இன்றும் இருந்து வருகின்றது. இறந்தவர் வழிபாடு பின்பு மனித வடிவான கடவுள் வழிபாடாயிற்று. முற்காலப் போர் வீரன் கையில் மெலியவன் ஒருவன் அகப்பட்டுக் கொண்டால் அவனிடமிருந்து உயிர் தப்புவதற்கு அவன் அழுவான் குழறுவான் குதிப்பான்; அவனுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பான். இவ்வாறே முற்காலமக்கள், கடவுளை வழிபட்டார்கள். மனிதன் தன் அறிவுக்கேற்பவே கடவுளையும் கற்பனை செய்தான். மிக மிக முற்காலத்தில் மனித ஊன் உண்ணும் மக்கள் தமது தலைவனைப்போன்ற வடிவில் கடவுளை வழிபட்டார்கள். ஆதலினாலேயே முற்காலக் கடவுளர் பயம் அளிக்கும் தோற்றமும், மனிதபலி, இரத்தப் பலிகளை ஏற்கும் இயல்பும் உடையராகவும் காணப்பட்டனர். நாட் கழியக்கழிய மக்களின் அறிவு படிப்படியே பண்பட்டது. அப்பொழுது நரபலிகள் நின்றுபோயின. நரபலிக்குப் பதில் விலங்குப் பலிகள் இடப்பட்டன. மேலும் மக்களின் அறிவு பண்பட்டது. அவர்கள் விலங்குகளுக்குப் பதில் தானியங்களாற் செய்த உணவையும், பழவகைகளையும், மாவினாற் செய்த விலங்குகளையும் பலியாக இட்டனர். மனித ஊன் உண்ணும் தலைவன் நாகரிகமடைந்து குடிகளை நன்கு காக்கும் அரசனானபோது மக்கள் கடவுளைக் குடிகளிடத்து அன்புள்ள அரசன் ஒருவனைப்போலும் இரக்கமுள்ள தாய் தந்தையரைப்போலும் வழிபட்டார்கள். இவ்வாறு சமயம் மக்களிடையே தோன்றி வளர்ச்சியடைந்தது.

மக்கட் கூட்டத்தினரின் தலையில் ஏறி அதிகாரத்தோடு ஒருவன் குந்தியிருக்க விரும்பினால் அவன் சமயத்தைப் பொருட்படுத்தாமல் இருக்கமுடியாது. இவ்விருப்புக் கொண்டபலர் விரைவில் தோன்றினார்கள். அவர்கள் பொதுமக்களினின்று தனியாகப் பிரிந்தனர். மற்றவர்களினும் பார்க்கத் தமக்குக் கடவுளைப்பற்றி நன்கு தெரியும் எனக் கூறினர்[1]; தாம் கடவுளருக்கு அண்மையிலுள்ளவர்கள் என்றனர்; தமது வேண்டுகோள்களை கடவுளர் ஏற்று நடத்துகின்றனர் எனப் புகன்றனர். இதனால் அவர்கள் கடவுளருக்கும், கடவுளரை வழிபடுவோருக்கும் இடையில் நிற்கும் தரகராகிய நிலையை அடைந்தனர்; கடவுளருக்கே கொடுக்கும் காணிக்கைகளும், இடும் பலிகளும், கூறும் துதிகளும் தங்கள் மூலமே செல்லுதல் வேண்டுமெனச் சாற்றினர்; மக்கள் தமக்குப் பயந்து அடங்கி நடக்கும்படி பயம் விளைக்கும் கட்டுக்கதைகளைக் கூறினர்[2]. இதனால் அவர்கள் பொதுமக்களைத் தம் ஆணைக்குட்படுத்தி ஆளும் வல்லமையைப் பெற்றனர். இவ்வாறு தோன்றிய பார்ப்பார் சமயத்தை உண்டாக்கவில்லை. ஆனால் சமயத்தை தமக்குப் பலமாகப் பயன்படுத்தினர்.

---

1. This caste might be like the Indian Brahmans who now tries to maintain without exertion or danger, by means of the prestige of terrifying legends--Interpretation of History—p. 209—Max Nordan.

2. Mexican priests preached dreadfully in the temples putting men into horrid fright, by which means they moved them to do whatever they directed —Footprints of the past p. 135 J. M. Wheeler.

மிக முற்காலப் பழங்கதைகளிற் கூறப்படும் கடவுள், வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழைய அதிகாரி ஒருவனைப் பற்றி நினைவுக்குக் கொண்டு வருகின்றது. சமயத் தொடர்பான பலிகள், கிரியைகள், துதிகள், பாடல்களைப் படிக்கும் போது எங்களுக்கு உங்கள் முன்னோருடையவும் அதிகாரிகளு

## அரசன் ஆட்சியும் பார்ப்பார் ஆட்சியும் இணைந்து செல்லுதல்

அரசன் ஆயுதவலியாலும் ஆள்வலியாலும் மக்களை அடக்கி ஆள்பவன். இவ்வாறு பயமுறுத்தி அடக்கி மக்களை ஆளும் திறமை, தன்னைக் கடவுள் தன்மையோடு தொடர்பு படுத்துவதால் மேலும் வலியுறும் என்றும், அதனால் பொருள் செட்டாகும் என்றும் அவன் கருதினான். மக்கள் கடவுளை அரசன் வடிவில் வழிபட்டமையின் அரசன் கடவுளாதலும் கூடும் என அவன் கண்டான். எகிப்திலும் மேற்கு ஆசியாவிலும், அரசர் கடவுளுக்குரிய வழிபாடுகளைப் பெற்றனர். யூலியர் சீசர் காலத்தில்

---

டையவும் வாழ்க்கை எவ்வாறிருந்ததெனக் கண் முன் தோன்றுவதுபோல வெளிச்சமாகின்றது. மனிதன் கடவுளைத் தனது வடிவில் உண்டாக்கவில்லை; ஒரு தலையாரி அல்லது அரசன் வடிவில் உண்டாக்கினான். அவனுடைய கடவுளைப்பற்றிய எண்ண வளர்ச்சி அரசாட்சி முறையில் வளர்ந்தது. மனித ஊன் உண்ணும் பழங்கால மனிதன் நாகரிகமடைந்த ஆட்சித் தலைவனாகை மாறினான். அடிமைகளின் தலைகளைத் தன் கைகளால் வெட்டியெறியாமலும், இரத்தத்தில் தோயாமலும் ஆட்சிக்குட்பட்ட எல்லாப் பெண்களையும் தனது மனைவியராக்காமலும், அவன் நியாயமும் அறிவும் உடையவனாய்க் குடிகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை அறிந்து, நாட்டில் ஞாயமும் ஒழுங்கும் இருக்கும்படி செய்து மக்களைக் காப்பதில் மகிழ்ச்சியடைந்தான். ஆகவே மனித கற்பனையில் தோன்றிய கடவுள், கொடுமை, அவா, களிப்பு, கொலை முதலியவை நிறைந்த நிகிரோவ அதிகாரி போலல்லாமல் அறிவும் நீதியும் தயவுமுள்ள ஒரு அரசன் போல மாறினார். அவரை இவ்வுலகை ஆளும் அரசனைப் போலப் பெருமக்கள் சபை, (தேவராகிய) பரிவாரங்கள், அடியார்கள் மெய்காப்பாளர் முதலினோர் சூழ்ந்திருந்தனர்,

மனிதன் தன் வாழ்க்கையில் கொண்ட விருப்பமே சமய உணர்ச்சிக்கு ஏது. தனக்குத் துன்பம் நேர்ந்தபோது அவன் கண்ணுக்குப் புலப்படாத கடவுளின் உதவியை வேண்டினான். அவ்வுதவியைப் பெறுவதற்கு அவன் முயன்ற வகைகளிலிருந்து நூதனமான கிரியைகளும் மந்திர வித்தைகளும் தோன்றின— Interpretation of History—p—195

உரோம்நகரிலுள்ள கோயில்களில் அரசனுக்குப் பலிபீடமிருந்தது. அரசன் கடவுளல்லாதபோது கடவுளின், திருக்குமாரனுகக் கொள்ளப்பட்டான். பெரிய அலக்சாந்தர் கடவுளின் புதல்வனுகக் கருதப்பட்டார். சேர்மன் ஜப்பான், நோர்டிக் அரசர் தமது வழியைக் கடவுளிலிருந்து கூறினர்.

தம்மைக் கடவுளோடு தொடர்புபடுத்திய அரசனின் போர்வீரரும், பரிவாரங்களும் ஆடம்பரமான உடை அணிந்தனர்; பலவகை அடையாளங்களைத் தரித்தனர். இத்தோற்றங்களைக் கண்ட மக்களின் உள்ளத்தில் வியப்பு, மரியாதை, அச்சம் முதலியன தோன்றின. அரசன் பார்ப்பாரின் உரிமைகளைக் காப்பாற்றுவதாக உறுதி கூறினுன். அவர்கள் அரசனின் மெய்காவலர்களாயினர்.

அரசன் ஆயுதம் தாங்கிய வீரர் மூலம் வற்புறுத்திய கீழ்ப்படிவைப் பார்ப்பார் கோயில்களினின்று மக்களுக்கு வற்புறுத்தினர். அரசன் தனது படைப்பலத்துக்கு இரண்டாவதாக கோயில்களின் பலத்தில் நம்பிக்கை கொண்டிருந்தான். கோயில்களைத் தாக்குவதென்பது அரசனைத் தாக்குவதும்போலாகும். ஆகவே அரசன், கோயில்களின் பகைவர் சமயத்தை நம்பாதவர்கள் முதலியவர்களைத் தண்டிக்கப் பார்ப்பாருக்கு அதிகாரம் அளித்தான். மக்களுடைய வாழ்க்கை முறைகளைப் பயிற்றும் பொறுப்பு பார்ப்பாரிடத்து விடப்பட்டது. சிறுவருக்குக் கல்வி பயிற்றுவதும் அவர்கள் வேலையாகவிருந்தது. அரசனுக்குப் பணிந்து நடப்பது கட்டாயம் என்றும், வரிகளையும் கடமைகளையும் தப்பாமல் செலுத்த வேண்டுமென்றும் அவர்கள் வற்புறுத்திவந்தார்கள். இவ்வாறு அரசன் ஆட்சியும் பார்ப்பார் ஆட்சியும் ஒன்றுக்கு ஒன்று

பக்கபலமாக, இணைந்து நடந்தன: நடக்கின்றன. சில சமயங்களில் பார்ப்பார் ஆட்சி அரசன் ஆட்சியிலும் பார்க்க ஓங்கியிருந்தது. அரசனுடைய செங்கோலைப் பிடுங்கித் தமது கையில் பிடித்து ஆட்சி புரிந்த பார்ப்பாரைப் பற்றி வரலாறுகளிற் படிக்கின்றோம். அரசனை ஆக்கும் வல்லமையும் அழிக்கும் வல்லமையும் பார்ப்பார் கையில் இருந்தது.

## பார்ப்பார் ஆட்சியில் கொடுமை

தீய அரசன் ஆட்சியில் மக்கள் அடைந்த துன்பங்களுக்கு அளவே இல்லை. இவ்வாறு மக்கள் அடைந்த துன்பங்களைப்பற்றி எல்லா நாட்டு வரலாறுகளிலும் படிக்கின்றோம். ஒரு அரசன் இறந்துவிட்டால் இன்னொரு அரசன் வருவான். அவன் குடிகளுக்கு நன்மைகளும் புரிவான். பார்ப்பார் ஆட்சியோ என்றும் ஒருவகையாகவே இருந்தது. அரசன் ஆட்சியைப்போல அதற்கு முடிவும் தொடக்கமும் இருக்கவில்லை. அரசன் இறந்துவிட்டாலும் கோயில்கள் என்றும் இருப்பனவாகும். பார்ப்பனர் நாள்வீதம் மக்களை அடிமைப்படுத்தி அவர்களின் செல்வத்தை உறிஞ்சி வந்தார்கள். மக்கள் இதனை உணர்ந்தார்கள். அங்குமிங்கும் புரட்சி செய்வதற்குச் சிலர் முயன்றார்கள். அவர்களின் தலைகள் கொய்யப்பட்டன. அவர்கள் உயிரோடு தீயிலிட்டுக் கொளுத்தப்பட்டனர்: சிலுவையில் அறையப்பட்டனர். சித்திரவதை செய்யப்பட்டனர்: இருட்டறைகளில் அடைக்கப்பட்டனர்: நஞ்சூட்டப்பட்டனர். பூமியைச் சூரியன் சுற்றிவரவில்லை, சூரியனைப் பூமி சுற்றிவருகின்றதெனக் கூறிய கலிலியோ கலிலி சிறையிலடைக்கப்பட்டார். முற்காலத்தில் சமயத்துக்கு மாறாக ஒருவன் நாவசைத்தால் அவன்

நாக்குப் போவதுமல்லாமல் தலையுமே போய்விடும். மதப் புரட்சிகளால் ஆயிரக்கணக்கான மக்களின் தலைகள் வாளினுற் கொய்யப்பட்டு நிலத்தில் உருண்டன; ஆயிரக்கணக்கானோர் உயிரோடு தீயில் வெந்து சாம்பலானார்கள், ஆயிரக்கணக்கானோர் கழு மரங்களில் உடல் பிறுண்டு நாய் நரிகள் இறைச்சியைப் பிடுங்கித்தின்னும்படி கிடந்து மாண்டார்கள். மக்களின் நாகரிகம் மிக விரைவாக முன்னேறியிருக்கும்; அதனை விரைந்து முன்னேறவிடாது தடைசெய்தோர் சமயபாரகர்களெனத் தம்மைக் கூறிக்கொண்ட பார்ப்பாரேயாவர். சமயத்தினுலேயே மக்களுக்கு எல்லா வகை இன்னல்களும் நேர்ந்தன.[1]

பார்ப்பார் மிகப்பழமை தொட்டே மக்களைப் பிடித்து இன்னல் விளைத்து அவர்கள் தோள்மீது ஏறிச் சவாரி செய்வதை மேல்நாட்டு ஆசிரியர் ஒருவர், ஆராபிக் கதைகளிற் கூறப்படும் சின்பாட் என்னும் கப்பற்காரனைப் பிடித்து உலைத்த கடல் மனிதனின் கதைக்கு ஒப்பிடுகின்றார். அக்கதை வருமாறு; ஒருமுறை சின்பாட் கடற்பயணஞ் செய்தபோது அவன் சென்ற மரக்கலம் புயலிலகப்பட்டுப் பாறையில் மோதி உடைந்து போயிற்று. அவன் கடலில் மிதந்து கொண்டிருந்த பலகை ஒன்றைப் பிடித்துக் கொண்டு ஒரு தீவின் கரையை அடைந்தான். சிறிது நேரத்தில் அவ்விடம் வெறுப்பான தோற்றமுடைய ஒருவன் வந்தான். அவன் யாதும் பேசாது அவனுடைய தோள்களில் ஏறி உட்கார்ந்து கால்களை விலாப்புறங்களில் மாட்டிக்கொண்டு அவனைவிட்டு விலகாதவனுயிருந்தான்.

---

1. Religion is the chief cause of all the sorrows of humanity everywhere useless, it has only served to drive men to evil and plunge them in brutal misery... It makes of history...an immense *tableau* of human follies—The Interpretation of History p. 213.

தான் விரும்பியபடி செல்லாவிட்டால் அவன் சின்பாட்டை கைகளால் குத்தினன், கால்களால் அடித்தான். அவனை அப்புறப்படுத்த முடியவில்லை. நித்திரையிலும் அவன் சின் பாட்டை விட்டுப் பிரியவில்லை. ஒருநாள் சின்பாட் மலை அடிவாரத்தில் சென்றான். அங்கு முந்திரிகைக் கொடி களில் பழங்கள் பழுத்துத் தொங்கின. பக்கத்தே நீற்றுப் பூசினிக் கொடிகளில் காய்களும் இருந்தன. அவன் சில காய்களைப் பறித்து அவைகளில் துளைசெய்து உள்ளே யிருந்த விதைகளை எல்லாம் வெளிப் படுத்தினன். பின் அவைகளுள் முந்திரிகைப் பழங்களைப் பிழிந்து சாற்றை நிரப்பிவைத்தான். சில நாட்களின்பின் மறுபடியும் அவன் அவ்விடம் சென்றான். அச்சாற்றில் சிறிதை அவன் குடித் தான்; தோள்மீதிருந்த மனிதனுக்கும் கொடுத்தான். அது மிகவும் சுவைகொடுத்தது. அம்மனிதன் மேலும் மேலும் அவ்விரசத்தை வாங்கிக் குடித்தான். அதனல் அவனுக்கு மயக்கம் உண்டாகிவிட்டது. அப்பொழுது சின்பாட் அம்மனிதனின் பிடிகளை விடுவித்து அவனைக் கீழேதள்ளி னன். பின்பு அவன் தலையில் பெரிய பாறாங்கல்லை எடுத் துப் போட்டு விட்டுக் கடற்கரைக்கு ஓடிச்சென்றான். கரை யில் ஒரு மரக்கலம் தென்பட்டது. அவன் சத்தமிட்டான். மரக்கலம் கிட்டவந்தது. அவன் அதில் ஏறிக்கொண்டு தனது ஊர் சேர்ந்தான். இது நல்ல உவமையாகவே தோன்றுகின்றது.

## பார்ப்பாரத் தொழில் இழிந்ததே பழக்கத்தால் உயர்ந்ததெனக் கொள்ளப்படுகின்றது.

பார்ப்பனத் தொழில் என்பது பொருளை உறிஞ்சு வதற்காகச் சூழ்ந்து எழுந்த ஏமாற்றுத் தொழில் என்பது ஆராய்ந்துபார்க்கும்போது எளிதில் புலப்படுகின்றது.

ஏமாற்றுத் தொழிலாயினும் அது எப்பொழுதும் அவ்வாறு தோன்றமாட்டாது. பழங்காலம் முதல் தொடர்ந்து வரும் தீய வழக்கங்கள் தீமையுடையனவென்று சடுதியில் தோன்றுவதில்லை. நன்றாக உறுதிப்பட்ட கோயிற்கட்டளை களும், கிரியையும், அவைகளின் தொடக்கமும் கருத்து முதலியவைகளும் ஆராயப்படுவதில்லை. பார்ப்பார் தாம் படித்திருக்கின்றவும், படிக்க வேண்டியவும் சமயக்கொள் கைகளை நன்றாக நம்புகிறார்கள். பார்ப்பாரத் தொழில் என் பது அவர்களுக்கு ஒரு மதிப்பு. வருவாய் அளிக்கும் ஏனைய தொழில்களைப் போலவே அதுவும் ஒன்று. அது அவர் களுக்கு ஏற்றதாயும், ஒழுங்கான வருவாய் தருவதாயும், சில வகைகளில் பல வாய்ப்புக்கள் அளிப்பதாயு முள்ளது. பார்ப்பனத் தொழிலால் அவர்கள் அடையும் இன்பம் எவ்வகையான மாறுபட்ட எண்ணங்களாலும் கலைக்கப்படு வதில்லை. கடவுளை வழிபடும் மக்கள் பத்திகாரணமாகக் கொடுக்கும் பொருளுக்குத் தக்க கைம்மாறு அளிக்கிறார் களோ என்று நினைத்து அவர்கள் சிறிது அயர்தல் கூடும். ஒரு வழக்கம் தீயதாயினும் சமூகத்தாலும் ஆட்சியினரா லும் ஒப்புக் கொள்ளப்பட்டால் அது முற்போக்குக்கு உரியதெனக் கொள்ளப்படுகின்றது. ஆகவே இன்று பார்ப் பானுகவும் நேர்மையுடையவனுகவும் இருக்க முடிகிறது. தனது தொழில் மக்களின் அறியாமையை வாய்ப்பாகக் கொண்டு அவர்கள் பொருளை உண்டு வாழ்வதற்கு உண் டானதென்று அவன் உணரமாட்டான்.[1]

## சுமேரிய பார்ப்பனர்

சுமேரியாவில் ஒவ்வொரு நகரமும் ஒவ்வொரு பார்ப் பானல் ஆளப்பட்டது. அவன் **படேசி** (Patese) எனப்

1. The interpretation of History p. 210.

பட்டான். அரசாங்க சட்டம் ஒவ்வொன்றும் சமயத்தினுல் கட்டப்பட்டிருந்தது. கோயில்களில் தெய்வங்கள் இருந்தன. அவைகளுக்கு உணவு, மனைவியர், செல்வம் முதலியன அளிக்கப்பட்டன. குடியா என்னும் இடத்தில் சில களிமண் சுவடிகள் கிடைத்தன. அவைகளைக் கொண்டு அக்காலத் தெய்வங்கள் எருது, ஆடு, புரு, கோழி தாரா, மீன், பேரீந்தின் பழம், அத்திப்பழம், வெள்ளரிக்காய், வெண்ணெய், எண்ணெய், பணியாரம் முதலியவைகளை அதிகம் விரும்பின எனத்தெரிகின்றது. இதனுல் அக்காலச் சுமேரியரின் அடுக்களைகளில் பயன் படுத்தப்பட்ட உணவுப் பண்டங்கள் எவை எனத் தெரிகின்றது. தொடக்கத்தில் கடவுளர் மனித ஊனை விரும்பிக் கேட்டனர். மனிதவொழுக்கம் சீர்பட்டபோது மக்கள் மனிதனுக்குப்பதில் விலங்குகளைக் கொடுத்தனர். அங்குக் கிடைத்த களிமண் ஏட்டில் மனிதனுக்குப்பதில் ஆட்டுக்குட்டி கொடுக்கப்பட்டதெனச் சொல்லப்பட்டுள்ளது.

இவ்வகைச் செல்வங்களை நிறையப்பெற்றமையால் நகரங்களில் வாழ்ந்த பார்ப்பார் பெரும் செல்வவான்களாயினர். பெரும்பாலும் நடைமுறையில் பார்ப்பாரே ஆளுவோராயிருந்தனர். அரசனுடைய அதிகாரம் எவ்வளவு, பார்ப்பாரின் அதிகாரம் எவ்வளவு என்று அறியமுடியாதபடி அவர்களின் அதிகாரம் ஓங்கியிருந்தது.

உருக்கினு என்னும் சுமேரிய அரசன் பார்ப்பாருக்கு மாறுகப் பெரிய புரட்சிசெய்தான். குடிசனங்களின் செல்வத்தைக் கவர்வதாகவும், கைக்கூலி பெறுவதாகவும் அவன் பார்ப்பாரைக் குற்றஞ் சாட்டினுன். கோயில்களில் கொடுக்கப்படும் பொருளைப் பார்ப்பார் பயன் கொள்ளாது

காக்கும்படியும் அவன் சட்டம் செய்தான். அவன் இறந்ததும் பழையபடியும் பார்ப்பாரின் ஆட்சி ஓங்கிற்று.[1]

## எகிப்திய பார்ப்பார்

எகிப்திலே அரசனுடைய அதிகாரத்திலும் மேலான அதிகாரம் படைத்த ஒரு கூட்டத்தினர் விளங்கினர்கள். அவர்கள் பார்ப்பார். எல்லா நாடுகளிலும் போல அரசாங்கத்துக்கும் பார்ப்பாருக்கு மிடையில் அதிகாரத்தின் பொருட்டு மல்லுக்கட்டுதல் இருந்துவந்தது. ஒவ்வொரு போரிலும் கிடைக்கும் கொள்ளைப் பொருள்களின் பெரும்பாகம் பார்ப்பாரையும் கோயிலையும் அடைந்தன. மூன்றும் இராம்சேஸ் அரசன் காலத்தில் எகிப்திய கோயில்களில் 107,000 அடிமைகள் இருந்தார்கள். இது எகிப்தின் முழுமக்கள் தொகையில் பதின்மூன்றில் ஒன்றாகும். பார்ப்பாரிடம் 750,000 எக்கர் பயிரிடும் நிலம் இருந்தது. இது எகிப்து முழுமையிலும் பயிரிடும் நிலத்தில் ஏழில் ஒரு பகுதியாகும். அவர்களிடம் 500,000 ஆடுமாடுகள் இருந்தன. எகிப்து சிரியா என்னும் நாடுகளிலுள்ள 169 பட்டினங்களின் வருவாய் அவர்களை அடைந்தன. இராம்சே அரசன் அம்மன் கோயிலின் பார்ப்பாருக்கு 32,000 கிலோகிராம் பொன்னும் பத்துலட்சம் கிலோகிராம் வெள்ளியும், ஆண்டுதோறும் 155,000 மூட்டை தானியங்களும் வழங்கினன். அரசாங்க வேலையாட்களுக்குக் கூலி கொடுக்கும் பொருட்டுக் கருவூலத்தைப் பார்த்தபோது அங்கு யாதும் காணப்படவில்லை. தெய்வங்கள் அதிகம் அதிகமாக உண்ணும்போது மக்கள் அதிகம் அதிகமாகப் பட்டினி கிடந்தார்கள். காலம் செல்லச் செல்ல

---

1. The story of civilization.

அரசர் பார்ப்பாரின் ஏவலாளரானர்கள். இராமசிட் என்னும் அரசனின் செங்கோலைப் பிடுங்கி அம்மன் கோயிலின் தலைமைப் பார்ப்பான் ஆட்சிபுரிந்தான்.

## பாபிலோனிய பார்ப்பார்

பாபிலோனில் ஞாயத்தீர்ப்பாளர் (நியாயாதிபதிகள்) பார்ப்பாராயிருந்தனர். அரசனின் அதிகாரம் கோயிலால் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. உண்மையில் அரசன் நகரத்தினுள்ள கடவுளின் வேலையாளாக விருந்தான். தெய்வத்தின் பெயரால் வரி தண்டப்பட்டது. பார்ப்பாரின் உடன்பாடு இல்லாத அளவில் அரசன் அரசனுக மதிக்கப்படவில்லை. இதனைப் பின்பற்றியே இன்றைய முடிசூட்டுக்களில் புரோகிதன் பங்கு பெறுவது. தலைமுறை தலைமுறைகளில் கோயில்களில் செல்வம் திரண்டு பெருகிற்று. செல்வர் தமது ஊதியங்களின் ஒரு பகுதியைக் கோயிலுக்கு வழங்கினர். அரசர் கடவுளரின் தயவை நாடிக் கோயில்கள் எடுத்தனர். அவைகளுக்குத் தளபாடங்கள், உணவு, அடிமை, நிலம் அரச வருவாயில் ஒரு பகுதி முதலியவைகளைக் கொடுத்தனர். போர்களில் வெற்றி கிடைத்தால் போரில் பிடித்து அடிமையாக்கப் பட்டவர்களில் பெரும் பகுதியினர் கோயில்களுக்கு விடப்பட்டனர். போரில் கிடைத்த கொள்ளைப் பொருளின் பெரும் பகுதியும் அவைகளுக்குக் கொடுக்கப்பட்டன. சிறப்பாக ஏதும் அதிட்டம் உண்டானல் அரசன் சிறந்த கொடைகளைக் கடவுளுக்கு வழங்கினன். சில நிலங்களிலிருந்து திறையாகப் பேரீந்தின் பழம், தானியம், பழவகைகள் முதலியன கோயிலைச் சேர்ந்தன. அவ்வாறு கொடுக்கத் தவறிய போது நிலங்கள் பார்ப்பாரால் பறிக்கப்பட்டன. இவ்வாறு நிலங்கள் பார்ப்பாரை அடைந்தன, இவ்வுலக

நன்மைகளைக் கருதிச் செல்வரும் வறியரும் கோயில்களுக்குப் பொருள் கொடுத்தனர். பொன், வெள்ளி, செம்பு, இரத்தினக்கற்கள் முதலியவை கோயிற் களஞ்சியங்களில் குவிந்துகிடந்தன.

பார்ப்பார் இச் செல்வத்தை நேராகப் பயன்படுத்த மாட்டாமையால் ஊதிய மளிக்கக்கூடிய பயிர்ச் செய்கை, கைத்தொழில், முதலியவைகளின் பொருட்டுப் பயன்படுத்தினர். அவர்களிடத்தில் அதிக நிலம் மாத்திரமன்று, பல அடிமைகளும் இருந்தார்கள். அவர்கள் அடிமைகளைக் கூலிக்கு வேலைசெய்யும்படி போக்கி ஊதியம் பெற்றார்கள். வாத்தியம் வாசித்தல் முதல் மதுவடித்தல் வரையிலுள்ள தொழில்களுக்கு அவர்கள் பயன்படுத்தப்பட்டனர். பார்ப்பாரிடத்துப் பலர் பாதுகாப்பின் பொருட்டுப் பணத்தைக் கொடுத்தார்கள். இவர்கள் பொதுவாக வட்டிக்குப் பணம் கொடுப்பவர்களிலும் பார்க்கக் குறைந்த நிபந்தனையில் பணத்தைக் கொடுத்தார்கள். இவர்கள் கணக்கு எழுதுபவர்களாகவும், ஆவணங்கள் தீட்டுபவர்களாகவும், வழக்குகளை விளங்கித் தீர்ப்பளிப்பவர்களாகவும், அரசாங்க மூல ஆவணங்களைப் பாதுகாப்போராகவும், பதிவு செய்யப்பட்ட வாணிகத் தொழில் புரிவோராகவும் இருந்தனர்.

மிகமிக இன்றியமையாதபோது அரசன் கோயிற் பணத்தைத் தனது தேவைகளுக்குப் பயன்படுத்தினான். இது மிகவும் ஆபத்தானது. கோயிற்பணத்தைத் தீண்டுவோர்மீது பார்ப்பார் பொல்லாத சாபம் இட்டார்கள். இவர்கள் கோயிற் சொத்தில் அணுவளவேனும் வெளியே செல்ல அனுமதிக்கவில்லை. அரசனுக்கு மக்களிடத்தி லுள்ளதிலும் பார்க்கப் பார்ப்பாருக்கு அவர்களிடத்தி

னுள்ள செல்வாக்குப் பெரிதாக விருந்தது. பார்ப்பார் நினைத்தால் பொதுமக்களோடு சேர்ந்து அரசனை ஆட்சியி னின்று விழுத்திவிடுதல் கூடும். அவர்களின் பதவி எப் பொழுதும் உறுதியானது: அரசன் இறந்துபோனாலும் தெய்வங்கள் இருந்தன. தெரிவுசெய்து எடுக்கப்படுதல், போரால் உண்டாகும் கெடுதிகள் போன்றவைகளுக்குத் தப்பி இவர்கள் உறுதியான சமய ஆட்சியைக் கட்டினார் கள். இது இன்றுவரையும் நிலைபெறுகின்றது. இவ் வகையில் பார்ப்பார் ஓங்குவதைத் தடுக்க முடியாமல் இருந்தது. கிறித்து பிறப்பதற்குத் தொளாயிரம் ஆண்டுக ளுக்குமுன் எடுக்கப்பட்ட கணக்கின்படி அங்கு 65,000 கடவுளர் (கோயில்கள்) இருந்தனர். ஒவ்வொரு பட்டி னத்தையும் காப்பதற்கு ஒவ்வோர் தெய்வம் இருந்தது. இத் தெய்வங்களைத் தலைமை கொண்டு கிராமங்களிலும், கிராமங்களின் பகுதிகளிலும் சிறு தெய்வங்கள் இருந்தன. இத் தெய்வங்கள் மக்களிலிருந்து தொலைவில் இருக்க வில்லை. அவைகளுக்கு நிலத்தில் கோயில்கள் இருந்தன. அவை அதிக விருப்போடு உணவு உண்டன; பத்தியுள்ள பெண்களிடம் இராக்காலத்தில் சென்று அவர்களுக்குக் கருப்பதானஞ் செய்தன.

பாபிலோனிய சமயத்தின் மேலான இலக்குத், தேவர் களுக்குப் பலி செலுத்துவதே; பலி என்பது பழக்கம் வாய்ந்த பார்ப்பானால் சிக்கலான கிரியைகள் மூலம் தேவ ருக்குக் கொடுக்கும் உணவு. அவன் சொல்லும் ஒவ் வொரு சொல்லும் செயலும் புனிதமானவை. பாபி லோனியரின் சமயமென்பது நல்ல வாழ்க்கையிலும் பார்க் கச் சரியான கிரியையளவில் இருந்தது. ஒருவன் உலகில் செய்யும் மேலான கடமை கடவுளுக்குப் பலி செலுத்து

வதும், சரியான திதி கூறுவதும். அவன் விழுந்து போன பகைவனின் கண்ணைப் பிடுங்கலாம், கை கால்களை வெட்டலாம் அவைகளால் பாவம் நேராது. கடவுளருக்கு முன்னால் நறும்புகையிடுதல், அவர்களை அழகிய அணிகலன்களால் அலங்கரித்தல், தங்கள் குமாரத்திகளின் கன்னிமையை இஸ்ரார் கடவுளின் விழாவில் பலியிடுதல், கடவுளுக்கு முன்னால் உணவும் மதுவும் படைத்தல், பார்ப்பாருக்குத் தயாளமாகக் கொடுத்தல் முதலியன பாபிலோனியரின் உயர்ந்த சமயக் கருத்துக்களாம்.

## அசீரிய பார்ப்பார்

அசீரிய அரசன் தனது படைக்கு அடுத்தபடியில் கோயிலை நம்பினான். அவன் பார்ப்பாருக்குத் தயாளமாகப் பொருள் வழங்கினான். இராச்சியம் அசுர் கடவுள் பேரில் இருந்தது. வரி, வருவாய் முதலியன அக்கடவுளின் கருவூலத்தை நிறைக்கும் பொருட்டுத் தண்டப்பட்டன. பகைவரிடமிருந்து கொள்ளையிடும் பொருளையும் புகழையும் அசுர்க் கடவுளுக்குக் கொடுப்பதற்காகப் போர்கள் செய்யப்பட்டன. அரசன் தான் கடவுளின் புதல்வன் எனச் சொல்லிக்கொண்டான்.

## யூதேயாவில் பார்ப்பார்

செமித்தியர்களாகிய இவர்கள் நரபலிகள் இட்டு வந்தார்கள்; பின்பு விலங்குப் பலிகள் இட்டார்கள். ஆடுமாடுகளின் தலைக்கன்றுகள், குட்டிகள், பலியிடப்பட்டன. தொடக்கத்தில் பார்ப்பானால் கொன்று ஆசீர்வதித்துக் கடவுளுக்கு பலியாக வைக்கப்படாத விலங்குகள் உண்ணத் தகுதியற்றனவாகக் கொள்ளப்பட்டன. விருத்தசேதனம்

பலிவகைகளில் ஒன்றாக விருந்தது. பார்ப்பார் மாத்திரம் நன்றாகப் பலியைச் செலுத்தவும், கிரியைகளைப் பற்றியும் அவைகளின் பலன்களைப்பற்றியும் கூறவும் முடியும். 'லெவி' எனப்பட்ட குலத்தில் தோன்றியவர்களல்லாத மற்றொரு வரும் பார்ப்பாராக வரமுடியாது. அவர்களுக்கு, வரிகள் எல்லாம் நீக்கப்பட்டிருந்தன. விளைவில் பத்தில் ஒரு கடமையை அவர்கள் விதித்திருந்தார்கள். கடவுளுக்குக் கொடுக்கப்படும் பொருள்களில் தமக்கு வேண்டியவற்றை அவர்கள் பயன்படுத்தினார்கள். கோயில்களில் பெரும் செல்வம் திரண்டது. எருசலேம் ஆலயத்தில் வாழ்ந்த பார்ப்பார் தீப்ஸ், பாபிலோன் பட்டினங்களில் வாழ்ந்த தம்மினத்தவர்களை ஒப்ப அரசனிலும் பார்க்க அதிகார முடையவர்களானார்கள்.

யூதேய பார்ப்பார் உரோம்நகர்ப் போப்புகளைப் போல அரசன் செய்யமுடியாதவைகளை செய்யும் திறமை யுடையவர்களானார்கள்.

## ஐப்பானிய பார்ப்பார்

நாட்டில் மற்றத்தொழில்கள் குன்றியபோதும் பார்ப் பனத் தொழில் செழிப்படைந்தது. பார்ப்பாரின் செல் வம் தலைமுறைக்குத் தலைமுறை அதிகப்பட்டது. மக்களின் வறுமை ஒரே வகையாக இருந்து வந்தது. நாற்பது வயது உடைய ஒருவன் நாற்பது கோயில்களுக்கு அவன் பேரால் பூசை செய்வித்தால் அவனுக்கு பத்து ஆண்டு வாழ்நாள் பெருகும் என்றும், ஐம்பது வயதுக்குடையவன் ஐம்பது கோயில்களுக்கு அவ்வாறு செய்யின் பத்து ஆண்டுகள் பெருகுமென்றும், அறுபது வயதுடையவன் அறுபது கோயில்களுக்கு இவ்வாறு செய்தால் மேலும்

பத்து ஆண்டுகள் பெருகுமென்றும் பார்ப்பார் உறுதி கூறினார்கள். இவ்வாறு ஆயுளை விலைக்கு வாங்கும் பொருட்டு மக்கள் பெருந்தொகைப் பணத்தைக் கோயில்களுக்குக் கொடுத்து வந்தார்கள். தொகுதவாக் கூட்டத்தைச் சேர்ந்த பார்ப்பார் மதுவருந்தினார்கள்; வைப்பாட்டி வைத்திருந்தார்கள், பையன்களை விலை கொடுத்து வாங்கினார்கள்; அவர்களின் புருவ மயிரை மழித்தார்கள்; முகத்துக்குப் பொடி பூசினார்கள்; அவர்களைக் கூடாத செயலுக்குப் பயன்படுத்தினார்கள்.

## சிரிய அசிரிய பார்ப்பார்

* பினீசியரின் மொலோச் என்னும் கடவுள் உலோகத்தினால் செய்யப்பட்ட பெரிய உருவம். அது குந்தி இருக்கும் வடிவில் அமைக்கப்பட்டது. பலியிடும் காலத்தில் அது சிவப்பேறும்படி சூடாக்கப்படுகின்றது. சிறு குழந்தைகள் பலியிடும்பொருட்டுக் கொண்டுவரப்பட்டார்கள். அவர்கள் எரிகின்ற கடவுளின் கையில் வைக்கப்பட்டார்கள். அவர்கள் மிகவும் வேதனையோடு கதறி இறந்தார்கள். அப்பொழுது பார்ப்பாரும் அவர்களின் பரிவாரங்களும் எழுகின்ற பரிதாபமான கூச்சலை அமுக்கும்படி மேளங்கள், சல்லரிகளை அடித்தும், கொம்பு எக்காளங்களை ஊதியும் பெரிய சத்தம் செய்தார்கள். இந்தியாவைப்போலவே இந்நாடுகளிலும் இடபம் வழிபடப்பட்டது. குறிக்கப்

---

* இது A popular History of priest craft in all ages and nations என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது. இராக்காலத்தில் பலிபீடத்தின் முன்னால் மணலைப் பரப்பிவைத்து அதன்மீது பதிந்திருக்கும் தமது மனைவிமக்களுடைய பாதச் சுவடுகளையும் கடவுளரின் அடிகள் எனக் காலையில் மக்களுக்குக் காட்டினார்கள்.

பட்ட சில காலங்களில் பெரிய தீ வளர்த்து மனித பலிகள் இடப்பட்டன.

எரதோதசு (Heradotus) கூறியிருப்பது வருமாறு: "பாபிலோனில் உள்ள பேலஸ் என்னும் கோயிலின் ஒரு அறையில் நன்கு அலங்கரிக்கப்பட்ட கட்டில் ஒன்று வைக்கப்பட்டுள்ளது. அதன் அருகில் கட்டிப் பொன்னால் செய்யப்பட்ட மேசை ஒன்று இடப்பட்டுள்ளது; ஆனால் அங்கு கடவுள் வடிவம் இருக்கவில்லை. ஆடவன் எவனாவது அங்கு படுத்து உறங்குதல் ஆகாது. கன்னிப் பெண் ஒருத்தி அக்கட்டில் மீது இரவில் படுத்தாள். தெய்வம், கால்திய மக்கள் எல்லோரிலும் வடிவழகால் சிறந்த ஒரு பெண்ணைத் தெரிந்து எடுத்துக் கொள்ளுகிறதெனச் சால்திய பார்ப்பார் கூறினார்கள். தெய்வம் இராக்காலத்தில் அக்கட்டிலில் படுக்கின்றதெனவும் அவர்கள் உறுதியாகப் புகன்றனர். இவ்வகையாகவே தீப்ஸ் என்னும் எகிப்திய தலைநகரத்துப் பார்ப்பாரும் கூறினார்கள். இப் பெண்கள் ஆடவரோடு தொடர்பு வைத்திருப்பதில்லை என மக்கள் நம்பினார்கள். இலேசியாவிலும் இவ்வகை வழக்கு இருந்தது. இங்கு ஒழுங்காக வெளிப்பாடு கூறப்படவில்லை; கடவுளோடு பேசும் அவசியம் உண்டானபோது அப்பெண், வரும் இரவில் கோயிலில் தங்கியிருக்கக் கடமைப்பட்டிருந்தாள். தமது கூட்டத்தினர் எல்லோருக்காக கடவுளுக்கு அழகிய பெண்ணைத் தெரிந்தெடுப்பது என்னும் தலைப்பின் கீழ் பார்ப்பார் கடவுளின் பெயரால் கட்டுக்கடங்காத தமது காம இச்சையைத் தணித்துக் கொண்டனர்."

"யோசெபுஸ் என்னும் யூத சரித்திராசிரியரால் (கி. பி. 37) கிரீசில் வழக்கமாக நடைபெற்ற இவ்வகை நிகழ்ச்சி

ஒன்று கூறப்பட்டுள்ளது. அது மிக வியப்பானது. உயர் குலத்தவன் ஒருவன் தான் முன்பு தொடர்புவைத்திருந்த மணமான பெண் ஒருத்தியைக், கடவுள் விரும்புவதாகக் கூறிக் கோயிலுக்கு அழைக்கும்படி பார்ப்பாரைத் தூண்டினான். அவ்வாறு கோயிலுக்குக் கொண்டுவந்த பெண்ணைப் பார்ப்பாரும் இவ்வுயர் குலத்தவனும் மாத்திரமல்லாமல் அதிகாரத்திலுள்ளவர்கள் எல்லாரும் அனுபவித்தார்கள். இது எப்பொழுதும் பார்ப்பாரின் வழக்கமாகும். அசீரியா பாபிலோனிய ஆட்சியுள் அடங்கியிருந்த காலத்தில் மிலித்தியா என்னும் பாபிலோனிய பெண் தெய்வத்தின் கோயிலில் நடந்த ஆண்பெண் சேர்க்கை சம்பந்தமான இடக்கரான செயல் அளவு கடந்திருந்தது. மணமான அல்லது மணமாகாத எல்லாப் பெண்களும் தமது வாழ்நாளில் ஒரு முறை மிலித்தியாவின் கோயிலில் சென்று தாம் முதல் எதிர்ப்படுகின்ற ஒருவனுக்குத் தமது மானத்தை விற்று அதனால் கிடைக்கும் பணத்தைப் பார்ப்பாரின் வருமானம் மிகும்படி கோயில் உண்டியில் போடவேண்டியிருந்தது. இவ்வழக்கத்தைக் குறித்து எரதோதசு மாத்திரமல்லர், வேறு பலரும் கூறியுள்ளார்கள்.

தெய்வங்கள் இராக்காலத்தில் வந்து உணவுகளை உண்கின்றன எனப் பார்ப்பார் கூறினர். இராக்காலத்தில் பார்ப்பார் தமது மனைவி மக்களோடு தெய்வத்துக்குப் படைக்கப்பட்ட நேர்த்தியான உணவுகளை எல்லாம் வயிறுரப் புசித்தார்கள்.

## ஐரோப்பிய நாடுகளின் பார்ப்பார்

துருயித்தியர் (Druids) என்னும் பார்ப்பார் பிரான்சிசிலும் இங்கிலாந்திலும் வாழ்ந்தார்கள். இவர்கள் ஒரு

போதும் போரில் சேவை புரிவதில்லை. இவர்கள் வரிகள் எதுவும் கொடுப்பதும் இல்லை. இவர்கள் சுள்ளிகளைக் குவித்துப் பெரிய தீ வளர்த்தார்கள். அதில் மனிதரை உயிரோடு பலியாக இட்டார்கள். கொள்ளை, களவு, முதலிய குற்றங்களுக்காகத் தண்டிக்கப்பட்டவர்களே இவ்வாறு பயன் படுத்தப்பட்டனர். இவ்வகையினரின் பலிகளைத்தான் தேவர்கள் விரும்புவார்கள் என அவர்கள் நினைத்தார்கள். அவ்வகையினர் கிடைக்காதபோது குற்றம் அறியாத மக்கள் பலியிடப்பட்டார்கள்.

ஸ்காந்திநேவியாவில் விர்க்கா என்னும் பெண் தெய்வத்தை இராசகுமாரிகள் சேவித்தார்கள். இவர்கள் வெளிப்பாடு கூறினார்கள், கன்னிமையைக் காப்பாற்றினார்கள். தூய தீயை அணையாதபடி காத்தார்கள். பார்ப்பார் கடவுளின் எண்ணங்களைத் தாம் கூறுவதாக நடித்தனர். சில காலங்களில் கடவுளின் பெயரால் அரசனுடைய இரத்தத்தையும் கேட்டுப் பெற்றார்கள். இவ்வாறு தெய்வத்துக்கு இடப்பட்ட மனிதபலிகளின் உடல்கள் எரிக்கப்பட்டன, அல்லது கோயிலுக்குப் பக்கத்தேயுள்ள தூய சோலையிலுள்ள மரங்களில் கட்டித் தொங்கவிடப்பட்டன. இரத்தத்தின் ஒரு பகுதியைப் பார்ப்பார் மக்கள்மீதும், சோலையிலும், கோயிற் சுவர், மனைகள்மீதும் தெளித்தனர்.

உன்வெல் என்னும் ஆலயத்தில் தொர் கடவுளின் விழாவில் ஆண் பெண் தொடர்பான தடைகள் நீக்கப்பட்டிருந்தன. அதனால் அது காமவிழாவாகக் காட்சியளித்தது. அங்கு விரும்பத்தகாத ஆட்டங்களும், செயல்களும் நடிப்புகளும் நடைபெற்றன.

கிரீசில் மனிதபலிகள் இடப்பட்டன. சனித்தெய்வத்துக்கு ஆண்டுதோறும் குழந்தைகள் பலியிடப்பட்டன. ஏகேஸ் (Augurs) என்னும் பார்ப்பார் தாம் கடவுளின் நினைவுகளைக் கூறமுடியுமெனப் புகன்றனர். பறவைகள் பறப்பதையும் பலியிடப்பட்ட விலங்குகளின் குடல்களையும் பார்த்து அவர்கள் அவ்வாறு கூறினார்கள். கோயில்களில் விரும்பத்தகாத ஆண் பெண் சேர்க்கை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. *

## அமெரிக்க பார்ப்பார்

மெக்சிக்கோவில் கோயில்களில் மனிதபலிகள் இடப்பட்டன. கோயில்களில் கன்னிப் பெண்கள் இருந்தார்கள். போரில் பிடிக்கப்பட்டவர்கள் கோயில்களில் பலியிடப்பட்டார்கள். ஒரு ஆண்டில் இருபதினாயிரம் நரபலிகள் வரை இடப்பட்டன.

## உரோமாபுரிப் பார்ப்பார்

உரோமாபுரிப் பார்ப்பாரின் அதிகாரம் உலக முழுமையிலுமுள்ள பார்ப்பாரின் அதிகாரம் எல்லாம் திரண்டுருண்டு வடிவு கொண்டதை ஒத்தது. உரோமாபுரித் தலைமைப் பார்ப்பாரின் அதிகாரம் அரசனின் அதிகாரத்தையும் தன்னுள் அடக்கிற்று. பார்ப்பானுடைய எண்ணத்துக்கு மாறாக அரசனின் ஆணை செல்ல முடியாமல் இருந்தது. அரசனை ஆக்கவோ அழிக்கவோ பார்ப்பானால் முடியும். பாப்பு எனப்பட்ட பார்ப்பானின் கட்டளைக்குக் கீழ்ப்படியாதவர்களும், அவன் சமயத்தை நம்பாதவர்களும் தீயிலிட்டுக் கொளுத்தப்பட்டார்கள், இருட்டறையில்

* Baccanical frantic with midnight intemperance polluted the secret sanctuary, and prostitution sate throned upon the very altars of the gods—Ibid P 66

அடைக்கப்பட்டார்கள். இவ்வாறு கல்வியாற் சிறந்த பலர் தீக்கு இரையானார்கள். சூரியன் பூமியைச் சுற்றிவரவில்லை பூமியே சூரியனைச் சுற்றி வருகிறதெனக் கூறிய கலிலியோவை (1564-1642) ஏழாம் ஏர்பன் என்னும் உரோமாபுரிப் பார்ப்பான் சிறையிலடைத்ததோடு கலிலியோவின் நூலையும் எவரும் படித்தல் கூடாதெனச் சட்டம் செய்தான். சுவர்க்க நரகக் கதவுகளின் தாழ்க்கோல் தம்மிடம் இருப்பதாகப் பார்ப்பான் கூறினன். மக்கள் செய்யும் பாவங்களைப் பணத்தைப் பெற்றுக் கொண்டு மன்னிக்கும் ஆற்றல் தனக்கு உண்டெனக் கூறினன். இவ்வுலகில் மாத்திரமன்று மறு உலகிலும் தனது ஆணை நடக்கின்றதெனப் புகன்றான்.[1]

"திருமணம், உரிமை, ஒழுக்க சம்பந்தம், சமயத்தில் நம்பிக்கையின்மை, சமயத்தில் கொள்கை மாறுபடுதல், மந்திரவித்தை, கோயில்களில் ஒழுக்கக்கேடு போன்ற பலவகையான குற்றங்களுக்கு உரோமன் கத்தோலிக்க கோயில்கள் விலங்நுத் தண்டனை விதித்தன. சமயத்தை நம்பாதவர்கள் வழக்கமாகத் தீயிலிட்டுக் கொளுத்தப்பட்டார்கள்"[2]. யான் அவ் ஆக் என்னும் பெரிய வீரப்பெண் மந்திர வித்தைக்காரி என்று குற்றம் சாட்டப்பட்டுப் பார்ப்பாரால் எரிக்கப்பட்டாள். இவளை

---

1 The priest had not only power to hear sins, but also to parden them. He could shut up in hell, or let out; he was not content with enslaving his follower of this world—he carried his influence to the next and even invented a world from the torture of which no man can escape without his permission—Ibid p 109

2 The new age encyclopaedia Vol IV-P 132

ஒப்ப சியர்தானே போனே, மிச்சல் சேர்வரஸ் முதலிய பெரிய அறிவாளிகள் தீயிலிட்டு எரிக்கப்பட்டனர் [1].

இப் பார்ப்பார் மதத்தை மாட்டின் லூதர் என்னும் சேர்மானியர் (கி. மு. 1483-1546) எதிர்த்தார். பாவ மன்னிப்பு விற்பனை, மறுமையில் நல்லிடங்கள் பெறும் சீட்டு விற்பனை போன்றவைகளை எதிர்த்து இவர் மக்களுக்குப் போதனை செய்தார். கி.பி. மூன்ரும் நூற்ருண்டில் பார்ப்பார் திருமணம் செய்துகொள்ளுதல் கூடாதென்னும் சட்டம் உண்டாயிற்று. அதனல் நாடெங்கும் ஒழுக்கக் கேடுகள் பரவின, கற்புக்காக விரதமிருக்கும் பெண்களில் ஒருத்தியைக் கோயிற் பார்ப்பான் தனது படுக்கையில் வைத்திருப்பது அக்காலச் சாதாரண நிகழ்ச்சி. இது கட்டில் நின்ற எருதுகளை அவிழ்த்து பசுக்கூட்டத்தில் விட்டதுபோலாயிற்று.

## இந்திய பார்ப்பார்

இந்தியப் பார்ப்பாரைப்பற்றி நாம் எல்லோரும் அறிவோம். ஒரு நூற்ருண்டுக்கு முன் இந்தியப் பார்ப்பாரைக் குறித்து மேல் நாட்டவர்கள் எவ்வாறு விளங்கியிருந்தார்கள் என்பதை அறிவது மிக இன்பமளிப்பதாகும். ஹெவிட் என்பார் நூறு ஆண்டுகளுக்குமுன் "உலகம் முழுமையிலும் பார்ப்பாரத் தொழில்" என்னும் நூலில் எழுதியிருப்பதன் சுருக்கத்தை ஈண்டு தருகின்ருேம்.

1 Religion has employed every means for the destruction of its critics, from the poisoned cup forced on Socrates for trumped up reasons of state that were really reasons of religion is the stake at which Giordano. Brunc and Michael Servetus were burnt—The interpretation of History—H 215

"எல்லா நாடுகளிலும் பார்ப்பனத் தொழில் பார்ப்பாரை அதிகாரமும் கௌரவும் உடையவர்களாக்கிற்று. இந்தியாவிலோ விதவைகளைத் தீயிலிட்டுக்கொளுத்துவதையும், சோமநாதத்திற் பலர் தற்கொலை புரிந்துகொள்வதையும் குழந்தைகளைப் பலியிடுவதையும் அறியாதார் யார்? சோமநாதத்தில் ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கானோர் தற்கொலை புரிகின்றார்கள். சமீபகாலம் வரையில் அங்கு கோயில்களிற் பார்ப்பார் கடவுளுக்கென்று மிகவும் அழகான பெண்களைத் தேர்ந்தெடுத்தார்கள். இவர்கள் பார்ப்பாரின் காம இச்சைக்குப் பலியானார்கள். ஒவ்வொரு கோயிலிலும் இவ்வகைப் பெண்கள் கூட்டமாக இருக்கிறார்கள். இவர்கள் விலைமாதர்த் தொழிலால் ஈட்டும் பொருள் கோயிலின் உண்டியை நிரப்புகின்றது. இப்பெண்கள் மரியாதையிற் குறைந்தவர்களாகக் கொள்ளப்படமாட்டார்கள். இவர்கள் கடவுளின் மனைவியராகக் கருதப்படுவர். கடவுளுக்குச் செய்யப்படும் மரியாதையின் பகுதியை இவர்களும் பெறுகின்றனர். இவர்கள் திருமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார். கலியாணமின்றி இவர்கள் வயிற்றில் பிறக்கும் குழந்தைகள் கடவுளுடைய குழந்தைகளாகக் கொள்ளப்படுவர்; ஆண்கள் வாத்தியம் வாசிக்கப் பயிற்றப்படுவர், சிறுமியர் தாயின் தொழிலுக்குப் பயிற்றப்படுவர். சமய வளர்ச்சிக்காகப் பார்ப்பார் செய்யும் சிறப்பான செயல் இதுவாகும். பார்ப்பாரே வியபிசாரத்துக்குத் தலைவராவர்; கோயில்கள் வியபிசார விடுதிகளாகும்.

" கோயில்களில் பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட கடவுள் உருவங்கள் காணப்படுகின்றன. கோயிலில் தட்டு முட்டுகள் எல்லாம் பொன்

தகடுகளால் செய்யப்பட்டவை. சுருங்கக் கூறுமிடத்தில் கோயில்களில் செல்வம் நிறைந்திருந்தது. அராபியர் ஆற்றோட்டம்போல இந்தியாவுள் நுழைந்தார்கள். அவர்கள் இச் செல்வங்களைக் கொள்ளை அடித்தார்கள்.

“ மகமத்கசனி சோமநாத ஆலயத்தில் உள்ள செல்வத்தைப் பற்றிக் கேள்விப் பட்டான். அதன் சபை பொன் ஓடுகளால் வேயப்பட்டிருந்தது. கசனி அக்கோயிலை அடைந்தபோது மிக வியப்படைந்தான். அவன் கோயிலில் குவிந்து கிடந்த பொன்னும் வெள்ளியுமாகிய செல்வங்களைக் கொள்ளை கொண்டான். அவன் கடவுள் சிலையை அடித்து உடைக்கச் சென்றபோது பார்ப்பார் பெரும் தொகைப்பணம் கொடுப்பதாகக்கூறி அதனை உடைக்காதிருக்கும்படி வேண்டினர். அவன் அவர்கள் வார்த்தையைச் செவிக்கொள்ளாது விக்கிரகத்தை அடித்து உடைத்தபோது அதன் வயிற்றில் விலை ஏறப்பெற்ற முத்தும் நவமணிகளும் கலீர் என்று வெளியே சிந்தின. சோமநாதத்தில் கொள்ளையிடப்பட்ட செல்வத்தின் மதிப்பு கணக்கிட்டுக் கூறமுடியாத அளவினதாகும். எல்லாச் சாதியினரிடையும் பார்ப்பார் அரசனைத்தம் ஆணைக்குட்படுத்தி யிருந்தார்கள் எனக் காட்டியுள்ளோம். இந்தியாவிலோ அவர்கள் ஒருபடி அதிகம் சென்றிருந்தார்கள். அவர்கள் மனு நூல் என்னும் ஒரு புத்தகத்தை எழுதினார்கள். அதில் சொல்லப்படும் சட்டங்களைக் கடந்தவர்களின் முடிவு நரகம் எனக் கூறினார்கள். ஒரு சாதி இன்னொரு சாதியோடு கலத்தல் கூடாது; மகன் தந்தையின் தொழிலையே செய்தல் வேண்டும்; பார்ப்பான் அவனுக்கு வரி விதிக்கலாம்; அவனிடம் வேலை வாங்கலாம். பார்ப்பார் பிரமாவின்

முகத்தில் தோன்றினர்கள்: சத்திரியர் அல்லது அரசர் புயத்திலும், வணிகர் தொடையிலும், சூத்திரர் பாதத்திலும் தோன்றினர்கள் என மனு நூல் கூறு கின்றது: இக்கருத்து வலிய பிரமாணமாகக் கைக் கொள்ளப்படுகின்றது. அரசன் பார்ப்பாரின் கீழ் கல்வி பயின்றான்; அவர்கள் தமது எண்ணங்களுக்குச் சார்பான வாறு அரசனுக்குப் போதனை செய்தார்கள். அவர்களே அரசனுக்கு அமைச்சர்களுமாயிருந்தார்கள். இவ்வாறு அரசாங்க அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டபின் அவர்களுக்கு ஆட்சியை நடத்தித் தமது பைகளை நிரப்பிக் கொள்வது எளிதாக விருந்தது. அவர்கள் மக்களுக்கு அடுத்த உலகில் அனுபவிக்கும் சுகதுக்கங்களைக் கூறி அவர் களுக்குப் பயம் விளைத்தார்கள்.

"பார்ப்பார் போப்பின் கீழ் உள்ள பார்ப்பாரைப் போலவே வேதங்களைப் பிறர் படியாதவாறு மறைத்து வைத்து தாம் விரும்பியவாறு சமயக் கொள்கைகளை மக்க ளிடையே பரப்பினர். இந்திய ஆட்சியின் எல்லாக்காலங் களிலும் உண்மையில் பார்ப்பானே செங்கோலைப் பிடித்து ஆட்சி நடத்தினன். அவன் கையில் செங்கோலைப் பிடிக் கும் அவசியம் உண்டாகவில்லை. நாட்டையும் அரசனையும் ஒன்றுசேர்த்துத் தொழிற் படுத்துபவன் அவனாகவே இருந்தான்.

ஒருவன் பார்ப்பானை வைதால் வைதவன் வாயில் பழுக்கக் காய்ச்சிய பத்து அங்குலமுள்ள இரும்பைச் செலுத்த வேண்டும்; அவன் செய்யும் தொழிலைப்பற்றி ஏதும் குறை கூறினல் கொதி எண்ணெயை அவன் வாயி லும் காதிலும் ஊற்றவேண்டும். பார்ப்பானுடைய பகு

வைத் திருடியவனது கால்கள் வெட்டப்படவேண்டும். பார்ப்பானைக் கொல்லமுயன்றவன் நரகத்தில் நூறு ஆண்டுகளும் அடித்தவன் ஆயிரம் ஆண்டுகளும் இருப்பான் என மனுநூல் கூறுகின்றது.

மலையாளத்தில் உயர்ந்த சாதியான் ஒருவனைச் சண்டாளன் தீண்டினுல் உடனே அவனை உயர்ந்த சாதியான் தனது ஈட்டியை எடுத்து வீசிக்கொன்றுவிடலாம்[1].

இந்தியாவின் சிலபகுதிகளில் பார்ப்பாரே கலியாணமான பெண்களை முதலில் அனுபவித்தார்கள். பம்பாயில் இவ்வழக்கம் அண்மைவரையில் இருந்தது. திருப்பதிக் கோயிலிற் பார்ப்பார் பிள்ளை இல்லாத பெண்களை ஒரு இரவு கோயிலில் விட்டுச் சென்றுல் தாம் அப்பெண்களின் மலட்டுத்தன்மையைப் போக்கிவிடமுடியும் எனக் கூறினர்[2]. அரசர் இவர்களுக்கு நிலங்கள் கொடுத்தார்கள், அவைகளுக்கு வரிகள் நீக்கப்பட்டிருந்தன. இவர்கள் பூதேவர் எனப்பட்டார்கள். இவர்களுக்குக்கொடுப்பதே தானம் என்னும் பெயர் நிலைபெற்றது. அரச வருவாயிற் பெரும் பகுதி பார்ப்பாருக்குத் தானவகையிற் செலவு செய்யப்பட்டது.

---

1. But were a Chandala falling down on precipice, he would not extend a hand to save him from destruction. In such abomination are the chandalas held in the Malabar side of India, that if by chance he touches one of the superior tribe, he draws his sabre and cuts him down on the spot—ibid p. 93.

2. The Nambudiri Brahmans exercised the primae noctis over all brides in their territory and Purshimargiya priests of Bombay maintained this privilege until recent times. If we may believe Pre-dubois, the priests of the temple of Tirupati offered to cure barrenness in all women who could spend a night at the temple—History of Civilization p. 486.

பார்ப்பாருக்குத் தானங்கொடுப்பதால் மக்கள் பாவங்களைப் போக்கலாம். இறந்தவர்களை மறுமையில் இன்பமான இடங்களில் வாழும்படி செய்யலாம் என மக்கள் நம்பினார்கள். ஆகவே மக்கள் தமதும், தமது முன்னோருடையவும் மறுமையை நினைத்துத்தாம் அரிதில் முயன்று பெற்ற பொருள்களைப் பார்ப்பாருக்கும் கோயில்களுக்கும் கொடுத்தனர். எகிப்திய நாட்டில் எவ்வாறு பார்ப்பார் உயர்ந்த வாழ்க்கை நடத்தினர்களோ அதற்கும் மேலாக இந்தியப் பார்ப்பார் வாழ்க்கை நடத்தினர். மலேபாள தேசத்தில் மற்றைய நாடுகளிலும் பார்க்கப் பார்ப்பனர் அதிகாரம் படைத்திருந்தனர். அரசன் தொலேவில் நின்று தனது நிறை அளவு பொன்னை நிறுத்துப் பார்ப்பாருக்குத் தானஞ் செய்தான். இதுமாத்திரமன்று. ஆயிரக்கணக்கான பார்ப்பாருக்கு உணவும், கையுறையும் வழங்கினன். மணமான பெண்ணை முதன் முதல் பார்ப்பானே அனுபவிக்க வேண்டுமென்னும் வழக்கு உண்டாவதானல் பார்ப்பாருடைய அதிகாரம் எவ்வளவு உச்சநிலே அடைந்திருந்ததென்பதை நாமே உய்த்தறியலாம்.

## வடநாட்டுப் பார்ப்பார்

தென்னட்டுப் பார்ப்பார் கோயில்கள் வாயிலாக அதிகாரம் பெற்றனர் வடநாட்டுப் பார்ப்பார் பிராமணர் எனப்பட்டனர். இவர்கள் சில கிரியை முறைகளை எழுதி வைத்துக்கொண்டு அம் முறைப்படி யாகங்கள் செய்தால் பெரிய நன்மைகள் உண்டாகும், மறுமையிலும் சுகமுண்டு எனக்கூறினர். யாகம் செய்வது அரசர்போன்ற செல்வருக்கன்றிப் பொது மக்களுக்கு எளிதன்று. ஆகவே அரசன் பிராமணரின் வார்த்தைகளை மெய்யென நம்பிப் பெரும்பொருட் செலவில் பெரிய யாகங்களைச் செய்தான்,

யாகங்களினுல் அரசனின் கருவூலம் வறிதாயிற்று. பார்ப்பார் செல்வங்களை எல்லாம் தானமாகப் பெற்றனர். அவர்கள் செய்த யாகங்கள் அசுவமேதம், புருஷமேதம், சோமம், கோமேதம் போன்ற கொடிய யாகங்களாகும். இவ்வியாகங்களிற் கொல்லப்பட்ட விலங்குகள்மிடாக்களில் சமைக்கப்பட்டுப் பார்ப்பாரால் உண்ணப்பட்டன. இவைகளை உண்டதனுல் அதிக நிமை உண்டாகவில்லை. அதிக இடக்கரான கிரியைகளைச் செய்யும்படி அரச பத்தினிகளைத் தூண்டினர். புத்திர காமேஷ்டி யாகங்கள் என்பவை யாவை? அஸ்வமேதயாகம், புருடமேத யாகங்கள் மிக இடக்கரானவை. கொல்லப்பட்ட குதிரையோடும், மனிதனேடும் அரச பத்தினிகள் சேர்ந்தார்கள்; சேர உடன்பட்டார்கள்! இவ்வாறு செய்யும்படி பார்ப்பார் கட்டளையிட்டார்கள். அவ்வாறு செய்வதற்கு மந்திரங்களும் கிரியைகளும் எழுதிவைத்தார்கள் என்ருல் மனிதனின் தோள்மீது ஏறிச் சவாரி செய்த இவர்களைப்போல வேறு எவரையும் காண்டல் அரிது.

[1]“இப்பொழுது அரசனின் முதல்தேவி, பிரகஸ்பதி எனக் கருதப்படும் யாகத்தில் கொல்லப்பட்ட குதிரையின் அண்மையிற் சென்று அதன் விதையைப்பெறுவதற்கு ஆவல் அடைகிருள். பின்பு அவள் குதிரையின் பக்கத்தே படுக்கிருள். மந்திரங்கள் சொல்லப்படும்போது அவள் குதிரையைச் சேருவதற்குப் பலவாறு முயல்கின்ருள். இடக்கான இந்நிகழ்ச்சி நடைபெறும்போது அத்வாரு என்னும் வேள்விபுரியும் தலைமைப் பார்ப்பான் குதிரையையும் அரசபத்தினியையும் போர்வையால் மூடிவிடுகிருன். இடக்கரான அச்செயலைப் புரிவதற்கு அவள் மூன்று

1. Indian Historical review Vol 16—1940—P. 86,

முறை மறுக்கிறாள். மூன்றுமுறை மற்றவர்கள் அவளுக்குச் சமாதானஞ் சொல்லி அவளை இணங்கவைக்கிறார்கள். எல்லாவகையான மோசமான, ஒழுக்கக்கேடான செயலும் பேச்சும் ஒருமித்து நிகழ்கின்றன. இவையெல்லாம் கருத்தரிக்கும் பொருட்டு ஆணும் பெண்ணும் சேர்வது தொடர்பான கிரியைகளும் மந்திரங்களுமாகும். பார்ப்பார், அரசி, தோழிகளுக்கிடையில் இடக்கரான சல்லாபம் நடைபெறுகிறது. இச்சல்லாபத்தின் இறுதியில் அரசியின் தோழிகளாலேயே அவள் இடக்கரான செயலுக்கு உடன்படுத்தப்படுகின்றாள்.

புருடமேத யாகத்திலும் அரசி கொல்லப்பட்ட ஆடவனுடன் படுக்கிறாள். இது அவள் அசுவமேதயாகத்தில் செய்துகொள்வது போன்ற செயலாகும். இருவரையும் போர்வையால் மூடியபின் அரசி இடக்கரான செயலைப் புரியும்படி விடப்படுகின்றாள். அசுவமேதயாகத்தில் நடந்தது போன்ற சல்லாபம் இப்பொழுது நடைபெறுகின்றது. இச்செயல் முடிந்ததும் ஹோதாவும் மற்றவர்களும் அவளைத் தூக்கி நிறுத்திவிடுகின்றார்கள்."

இவ்வகையான கிரியைகளைச் சொல்லும் நூல்கள் மிகப் புனிதமுடையனவென ஒரு கூட்டத்தார் சொல்ல அதனை உண்மையெனப் பொதுமக்கள் நம்புவார்களானால் அவர்களின் அறியாமை எவ்வளவு உச்சநிலையில் இருந்திருக்கின்றதென்பதை நாம் உய்த்தறியலாகும்.

## சில குறிப்புகள்

கிறித்து காலத்தவரான ஸ்ராபோ என்னும் பூமி சாத்திர ஆசிரியர் கூறியிருப்பது வருமாறு: கொரிந்துக்குச்செல்லும் எல்லா மனிதரும் பயன் அடைவதில்லை, பட்டினத்

தின் ஒவ்வொரு ஒடுங்கிய வீதிகளிலும் காதல் வேட்கை நிறைந்த பெண் பூசாரிகள் நெருங்கியிருந்தார்கள் வீதிகளின் இரண்டு பக்கங்களிலும் வியபிசார விடுதிகள் இருந்தன. வீனஸ் கோயிலில் ஆயிரம் "கோயில் பெண்கள்" இருந்தார்கள். இவர்கள் கப்பற்காரன் முதல் ஞானிக்கும், வணிகருக்கும், எழுத்தாளருக்கும் தங்கள் போகத்தை அளிக்க எப்பொழுதும் ஆயத்தமாய் இருந்தார்கள்."[1]

கொல்லத்தில் பாதி எருதும் பாதி மனிதனுமாகிய வடிவுடைய ஒரு தெய்வத்தையும் மக்கள் வணங்குகிறார்கள். அக்கடவுள் தனது விருப்பத்தை வாயினால் தெரிவிக்கிறது. சில சமயங்களில் அது நாற்பது கன்னிப் பெண்களின் இரத்தத்தைக் கேட்கின்றது. சில காணிக்கைகள் கொடுக்கச் சிலர் நேர்வதுபோல அங்கு பெற்றோர் தமது சிறுவரையும், சிறுமியரையும் தெய்வத்துக்கு நேர்ந்துவிடுகிறார்கள்.[2] இவ்வாறு இந்தியாவை 14-ம் நூற்றாண்டில் [3] தரிசித்த பிரயர் ஓதோரிக் என்பவன் கூறியுள்ளான்.

சோமநாதத்தில் தேர்விழாவுக்கு மிகப்பலர் வந்து கூடுகிறார்கள். பலர் தமது கழுத்தை உருண்டுவரும் தேர்ச் சக்கரத்தின் கீழ் கொடுத்து மடிகின்றனர். எந்த ஆண்டிலாவது ஐந்தாறு பேருக்குக் குறைவானவர்கள் மடிவதில்லை—ஷை.

யூதருடைய ஆலயங்களில் பரிசுத்த வியபிசாரங்கள் நடந்தன. எரதோதசு, ஸ்ராபோ, லூசியன் என்போர்

1. The life and faith - Rom Landau P. 215
2. Friar Oddoric 1321 A.D.
3. Footprint of the Past P 85 J. M. Wheeler

இவ்வழக்கம் பாபிலோனிலும் சிரியாவிலும் இருந்தமை யைக் குறிப்பிட்டுள்ளார்கள்.

பார்ப்பான் என்போன் வியப்புக்களை உண் டாக்கக்கூடிய மந்திர வித்தைக்காரன். தெய்வத்துக்கு மனிதபலிவேண்டுமென அவன் கூறினல் அவ்வாறு செய் யப்பட்டது.[1]

மூன்று கண்டங்களிலும் ஞாயிற்றுக்கடவுளின் பலி பீடங்களில் இரத்த வெள்ளம் ஆருக ஓடிற்று. பார்ப்பாஞ கிய தெய்வம் கட்டளையிட்டபோது ஆடவர், மகளிர், குழந்தைகளின் கழுத்துகள் பலியிடும் கத்தியின் கீழ்ச் சென்றன. இருண்ட உள்ளமுடைய பார்ப்பான் தான் சரியான கருமத்தைச் செய்வதாக நினைத்தான்![2]

கிழக்குத் தேசங்களில் பரத்தைத்தொழில் உடைய வள் கோயில் பரத்தையாயிருந்தாலன்றி மதிப்பு அடைய வில்லை. அவள் தனது தொழிலைச் சமயசம்பந்தமாகப் பயன்படுத்தினுள். எகிப்து, அசீரியா, பாபிலோனியா பாரசீகம் முதலிய நாடுகளில் கோயில்கள் ஒழுக்கக் கேடு களின் நிலையங்களாகவிருந்தன. ஆலயங்களில் ஆண் பெண் சேர்க்கைபுரிவது சமயக்கடமையாகக் கருதப்பட்டது. கிரீசில் இது சமயசம்பந்தத்திலும்பார்க்கப் பொருளீட்டும் தொழிலாகக் கருதப்பட்டது. கொரிந்தில் அபிரடோயிற் கோயிலில் கப்பற்காரரின் தேவையைப் பூர்த்தி செய்வதற் காக மிகுதியான விலைமாதர் இருந்தனர்.

---

1. Outline of knowledge Voll P 181—Fredrick H martain.

2. Ibid—p. 182.

சின்ன ஆசியாவிலுள்ள கிரேக்க நகரங்களில் கோயில் விலைமாதர் இருந்தனர். கிரீசில் அவர்கள் கீழாக மதிக்கப் பட்டனர். கிரேக்கில் விலைமாதர் அமைப்பு அரசாங்கத் துக்கு மாத்திரம் தனி உரிமையுடையதாயிருந்தது. அவ் வமைப்பினுல் வரும் பொருள் தீட்டுப்பணம் எனப்பட்டது. மிலிறஸ் என்னும் பட்டினம் விலைமாதருக்குப் பேர் போனது.[1]

பார்ப்பாரின் அதிகாரம் அரச அதிகாரத்தளவு இருந்தது. பழைய காலம் முதல் சமீபகாலம் வரையில் மக்களைத் தமது ஆணைக்கு உட்படுத்துவதிலும் அடக்குவதி லும் அவர்கள் போர்வீரரோடு போட்டியிட்டுவந்திருக் கிறார்கள்.[2]

பார்ப்பாரின் கொடுமையை ஒழிப்பதற்கே புத்தமதம் எழுந்தது. பார்ப்பாராகிய பிராமணர் பிற்காலத்தில் மிக அகங்காரங்கொண்டிருந்தார்கள். கல்வி இம்மனித தெய் வங்களிடமிருந்தது, மற்ற மூன்று சாதியினரும் மூடத் தனத்தில் இருப்பதே இவர்கள் வலிமையாகவிருந்தது.[3]

"பிராமணச் சட்டங்கள் பிராமணசத்திரிய சாதிகளை அமைப்பதில் வெற்றியடைந்தன. வேதபாடல்களைச் செய் தவர்களுடைய சந்ததியினரும் அவர்களின் உறவினரும் பிராமணர் என்னும் சாதியாராயினர். பிராமணன் பிரமா வின் மிகவும் உயர்ந்த பகுதியினின்று பிறந்தமையாலும், அவனிடத்தில் வேதம் இருப்பதாலும், அவன் உலகப் படைப்புக்கள் எல்லாவற்றுக்கும் தலைவனுக இருக்கின் றான் என மனு கூறுகின்றார்.

1. Ibid. p. 277. 2. History of civilization p. 68.

3. Literary achievement of Indian women—Mrs Hansa Metha—B.A.J.P.

இப்பொழுது வட இந்தியாவில் அங்கீகரிக்கப் பட்ட சமயத் தலைவன் இல்லை. சாத்திரங்களில் சொல்லப்பட்ட முக்கியமான விதிகளை ஒருவன் மீறினால் அவனுக்கு என்ன தண்டனை செய்யலாம் என்று பண்டிதர்களுடன் ஆலோசனை செய்யப்படுகின்றது. அவர்கள் தண்டனை விதிப்பதற்கு அவ்வளவு அதிகாரமுடையவர்களல்லர். அவர்கள் விரும்பினால் குற்றஞ் செய்தவன் கொடுக்கும் காரணங்களை ஏற்காமலும், அவன் வீட்டில் நடக்கும் கிரியைகளுக்குப் போகாமலும் விடலாம்.

தென்னிந்திய வைணவரல்லாத பிராமணர் சங்கராச்சாரியர் மடத்தின் அதிகாரத்துக்குட்பட்டவர்கள். இதன் தலைமையாயுள்ள சிருங்ககிரிமடம் மைசூரிலுள்ள துங்கபத்திராவில் உள்ளது. இம் மடத்தலைவர், ஐரோப்பாவிலுள்ள கத்தோலிக்கு மதத்தினருக்குப் பாப்பாண்டவர் எவ்வாறு அதிகாரத்தோடு இருக்கின்றாரோ, அவ்வாறு இருக்கின்றார்.

பிராமணனல்லாத இன்னொருவனுக்குப் பிராமணன் குனிந்து வணக்கஞ் செய்யமாட்டான். மற்ற வகுப்பிலுள்ள இன்னொருவன் வணக்கஞ் செய்தால் பிராமணன் "வெற்றி உனக்காகுக" என்று மாத்திரம் சொல்லுவான். வணக்கஞ் செய்தவன் அரசன் அல்லது பிரபுவானால் அவன் தனது வலது கையை நேராக நீட்டித் தனது மகிழ்ச்சியைத் தெரிவிப்பான். மற்ற வகுப்பினர் தமது மரியாதையைப் பிராமணருக்குப் பலவாறு தெரிவிக்கின்றனர். சிலர் அவன் பாதத்தில் விழுந்து வணங்குகின்றனர். பின்பு அவர்கள் அவன் பாதங்களைக் கைகளால் தொட்டு விரல்களைத் தமது வாயிலும், நெற்றியிலும் ஒற்றிக்கொள்கின்றனர். சூத்திர வகுப்பினர் பிராமண

னுடைய நிழலைத் தாண்டவும்மாட்டார்கள். இவர்கள் பிரா மணனின் பெருவிரல் வைத்துக் கழுவப்பட்ட நீரைக் குடி யாமல் காலையில் உண்ணமாட்டார்கள். பிராமணனல்லா தார் வீட்டில் வைத்துப் பிராமணக் குருமாரால் வழிபடும் கடவுளரை அவர்கள் கும்பிடமாட்டார்கள்.

சில காலங்களில் அவ்வாச்சாரியினரும் பிராமணர் எல்லோருக்கும் விருந்தும் தானங்களும் கொடுக்கவேண்டு மென்று அவர்களின் சாத்திரங்கள் கூறுகின்றன. முதல் மூன்று வகுப்பினர்களிடமிருந்து மாத்திரம் பிராமணன் உணவையும் தானத்தையும் தடையில்லாமல் ஏற்கலாம். அவன் சூத்திரனிடத்தில் தானம் வாங்கினாலும், அவன் சமைத்த உணவை உண்டாலும் அவன் பிராமணத் தன் மையை இழந்துவிடுகின்றான். சூத்திரனுடைய வீட்டில் பிராமணன் சமைக்கப்படாத உணவை அல்லது பிராமண னால் சமைக்கப்பட்ட உணவை உண்ணலாம். இக் காரணங் களால் பிராமணனிடத்தில் தானம் பெறுகின்றவன் தானம் கொடுக்கின்றவனுக்குப் பெரிய கடமைப்பாடு செய் கின்றவனாகக் கருதப்படுகின்றான்.

பிராமணன் சூத்திரன் ஒருவனைத் தான் உண்டு மிஞ் சிய எச்சிலாகிய பிரசாதத்தை உண்ணும்படி அழைப்பான். சிலர் இலையிலுள்ளதில் சிறிது கிள்ளி எடுத்து உண்பர், சிலர் இலையில் உள்ள உண்ட மிச்சத்தை உண்பர்.

சூத்திரன் பிராமணனுக்குத் திருமுகம் எழுதவேண்டு மானால் தான் அவனுடைய பாததாமரைகளுக்குக் கோடிவணக்கம் செய்வதாகத் தொடங்கி எழுதவேண்டும். பிராமணன் மற்றவர்களுக்கு எழுதவேண்டுமாயின் அவ னுக்கு இனிமேல் பல நன்மைகள் கிடைக்கத் தான் ஆசீர்வ

திப்பதாகத் தொடங்கி எழுதுவான். அவர்கள் தமது பெண்களுடைய பெயரின் இறுதியில் தேவி என்பதைச் சேர்த்து வழங்குவர்; சூத்திரப் பெண்களுக்கு அவர்கள் தாசி என்னும் பெயரை இறுதியில் இட்டு வழங்குவர்.

பிராமண பண்டிதர்களுக்கு ஒரு காலத்தில் மதிப்பிருந்தது. இந்து அரசர்காலத்தில் ஆட்சி அவர்கள் கையிலேயே இருந்ததென மக்கள் நம்பினர்கள். ஆங்கிலர் ஆட்சியில் அவர் பெயரே காணப்படவில்லை. கல்வியில்லாத மக்களிடையே அவர்களின் செல்வாக்கு இன்றும் இருந்து வருகின்றது. அவர்களுடைய தொழிலின் மதிப்புப் போய்விட்டது. மேலான ஆங்கிலக் கல்வியின் வளர்ச்சியினல் அக்கூட்டத்தினரின் செல்வாக்கும் குறைந்து வருகிறது.

இந்துக்களின் கருத்துப்படி பூசாரித் தொழில் தாழ்வுடையது. வாழ்க்கைக்கு வேறு வழியில்லாதவன் இத்தொழிலைப் புரியலாம். பூசாரித்தொழில் புரிபவர்கள் பெரும்பாலும் அறியாமையுடையவர்கள். அவர்கள் தமது கடமைக்கு வேண்டிய சில கிரியைகளை மாத்திரம் அறிந்தவர்களாவர்.

குரு அல்லது ஆச்சாரியர் என்னும் பெயர்கள் தொடக்கத்தில் வேதங்களைப் படிப்பிக்கின்றவனைக் குறிக்க வழங்கின. வேதங்களைப் படியாதவர்களையும் இப் பெயர்கள் குறிக்கும்படி பிராமணர் ஒரு சூழ்ச்சி செய்தனர். வேதங்களைப் பெண்களும் சூத்திரரும் படித்தல் ஆகாது. இருந்த இரையில் படிக்கக்கூடிய சில சொற்களை அவர்கள் மந்திரங்கள் எனக்கூறினர். மந்திரங்களைச் சூத்திரரும் பெண்களும் பயிலலாம். சிறிது கடவுள் பத்தியும், கெட்டித்

தனமுமுள்ள பிராமணனைச் சுற்றிப் பல மாணாக்கர் சேர்ந்தார்கள். அவர்கள் பிராமணனைத் தெய்வமெனக் கொண்டு அவனை வணங்கினவனுக்குப் பொருள் கொடுத்ததல்லாமல் அவனுடைய சந்ததியினருக்கும் ஆண்டு தோறும் வரி கொடுத்து வந்தனர். குரு மாணாக்கரைத் தனது சொத்துக்களாகக் கருதினார். குருவின் பிள்ளைகள் இச் சொத்துக்களைத் தமக்கிடையே பங்கு போட்டுக்கொண்டார்கள்.

இம்மந்திரங்கள் ஊங், றீங், கிலீங் போல்வன. குரு இம்மந்திரங்களை மாணாக்கரின் காதில் உபதேசித்து இவைகளால் அதிகம் நன்மை உண்டாகும் எனக் கூறினார். அவைகளின் தன்மைகளை அவர் யாருக்கும் சொல்லவில்லை. ஆகவே இச் செயல் வெளியே கண்டிக்கத்தக்க நிலைக்கு வரவில்லை. குரு இவை மிகவும் இரகசியமாக இருக்கவேண்டுமென வற்புறுத்தினார்.

வைணவர் இம் மந்திரங்களுக்குப் பதில் அரி என்னும் பேரைச் சொன்னால் போதுமானதென்றனர். மந்திரங்களுக்குப் பதில் கடவுளின் பெயரைக் குறிக்கப்பட்ட தரம் சொன்னால் அவனுக்குக் குரு தேவையில்லை எனவும் நம்பினர்!

நம்பூதிரிப் பிராமணனை நாயர் தொடுதல் கூடாது. தீயன் நம்பூதிரிக்கு முப்பத்தாறு அடி தூரத்தில் நிற்றல் வேண்டும்; மாலன் நாற்பது அடி தூரத்திலும், புலையன் 96 அடி தூரத்திலும் நிற்கவேண்டும். பிராமணனைப் புலையன் தீண்டினால் அவன் உடனே முழுகித் தனது உடையை மாற்றிக் கொள்ளவேண்டும்.

குரு அல்லது பூசாரித் தொழிலினால் அதிக மரியாதை, அதிகாரம், செல்வம் முதலியன உண்டாகும் என்று

கருதப்படுகின்றது. குருமார் தொடக்கத்தில் தம்மை மக்கள் மரியாதை செய்ய வேண்டுமென விரும்புகின்றார்கள். பின்பு அவர்கள் பொருளில் வாஞ்சையுடையர்களாகின்றனர். அவர்களில் அதிகாரம் வேரூன்றியதும் அரசனுக்கும் இல்லாத உல்லாச வாழ்க்கையை விரும்புகின்றனர். அரசர் தமது குடிகளின் வருவாயில் ஒரு பகுதியைப் பெற்று நிறைவடைவர். குருமாரோ தம்மிடம் அகப்பட்டவர்களை அழிப்பதால் பொருள் கிடைக்குமெனக் கண்டால் அதனைச் செய்துவிடுவார்கள். நியாயவாதிகளுக்காவது (வக்கீல்) கூலியின் அளவு உண்டு. குருமார் கேட்பதற்கு அளவு இல்லை. தம்மை அண்டியவர்களைச் செல்வராக்கும் வல்லமை தம்மிடம் உண்டென அவர்கள் கூறுவார்கள். ஆனால் அவர்கள் மற்றவரை வறுமை அடையச் செய்வதே முடிவு. குரு, தனது கிரியைகளும் மந்திரங்களும் பயனளிக்கவில்லையானால், குற்றத்தைத் தீய கிரகத்தின்மீதும், கிரியை புரிவித்தவனின் நம்பிக்கைக் குறைவின்மீதும் சுமத்துவர். குருட்டுத்தனமாகப் பெரிய கூட்டம் தம்மைப் பின் தொடர்கின்றது என்று கண்டதும் அவர்கள் தமது எல்லாத் தந்திரங்களையும் பயன்படுத்துவர். ஒருவன் காய்ச்சல் நோய்கொண்டானாயின், அவன் குயினா மருந்தில் வைக்கும் நம்பிக்கையிலும் பார்க்க குருமாரின் மந்திரங்களில் நம்பிக்கை மிகுதியாக வைக்கிறான். இடியின் கோபம் தாக்காதபடி ஒவ்வொரு இந்தியனும் வீட்டுக் கதவின் முன்புறத்தில் சமக்கிருத வசனங்கள் எழுதிய அட்டையை ஒட்டியிருந்த காலம் ஒன்று இருந்தது. மின்சாரம் சம்பந்தமான இக்காலக் கல்வி, இடியைத் தடுக்கும் ஐந்து கடவுளரை நம்புவதிலும் பார்க்க மின் கவரும் கம்பியை நம்பும்படி செய்துள்ளது. மரக்கலங்களுக்கு உடைவு அல்லது தீயினால் அபாயம்

உண்டாகாமல இருக்கும் பொருட்டு இன்றும் இந்திய வணிகர் பலர் பிரமா, கங்கை, வல்லபாச்சாரி முதலிய தெய்வங்களுக்குப் பெரும் பொருட் செலவு செய்து பூசைகள் இடுகின்றனர். இன்று நெருப்பினல் அபாயமுண்டாகாமல் இருப்பதற்கு செங்கற்களால் வீடுகள் கட்டப்படுகின்றன; கப்பல் உடைவுகளால் நேரும் நட்டத்துக்கு மக்கள் பிரமபூசை, கங்கா பூசைகளிலும் பார்க்க "இன்சூரன்ஸ் கம்பெனிகளை" நம்பி வருகின்றனர். காலந்தோறும் குருமாரின் வேலைகள் சுருங்கி வருகின்றன. குருமாரின் ஆட்சி சக்கரவர்த்திகளின் ஆட்சிபோல அமைக்கப்பட்டிருந்ததென்பதை நாம் சரித்திர முகமாக அறிகின்றோம். அரசனுடைய ஆணைக்குக் கீழ் உள்ள மக்கள் அவனுடைய ஆசிர்வாதத்தை விரும்பினார்கள். அவ்வாறே சமய ஆட்சிக்குட்பட்ட மக்கள் சமய குருவின் ஆசிர்வாதத்தை விரும்பினார்கள்.

வேட்டையாடியும் மீன் பிடித்தும் வாழுகின்ற நாகரிகமற்ற மனிதனை இரக்கமில்லாத குணங்களினல்தான் குரு அடையமுடியும். அநாகரிக மனிதனுக்குச் செல்வத்தைச் சேர்த்துவைப்பதில் விருப்பு இல்லை; அவனுக்கு மறுமையிலுண்டாகும் சுகதுக்கங்களைக் கூறுவதினலும் பயனில்லை. நோய்களும் மரணங்களும் இரத்த விருப்புள்ள மூர்க்கமான தெய்வங்களால் உண்டாகின்றனவென்றும் ஆடு, பன்றி, மாடு, எருமை முதலியவைகளைப் பலியிடுவதனல் அவைகளின் கோபம் தணியும் என்றும் கூறுவதே குருமார் போதிப்பதற்கு ஏற்ற பாடமாகும். இதனல் பூத வணக்கங்களும் மிருக பலிகளும் தோன்றின.

பின்பு மக்கள் பயிரிடுவோராக மாறினர். இப்பொழுது உடம்பு உழன்று உழைப்பதில் சோம்பல் கொண்

டோரும், பிறர் தொழிலின் தங்கிவாழ்பவர்களுமாகிய இக்கூட்டத்தினர், மழை ஒரு தெய்வத்தினல் உண்டாகின்றது எனக் கூறினர்.

இந் நம்பிக்கை வலுவடைந்தவுடன் குருமார் இவ் வழிபாட்டுக்கு ஒரு அட்டவணை கோலினர்கள். இது நெருப்பை வளர்த்து அதில் வெண்ணெயை ஊற்றிச் சாம் பிராணியை எரித்தல். குருமாரினல் பயிரிடும் மக்கள் அடைந்த பெரிய பலன் இதுவாகும். குருமாரின் சடங்குகளால் வீணே பண்டங்கள் செலவாயின. இது தடுக்க முடியாமல் எப்பொழுதும் வளர்ந்தது.

முற்காலக் குரு பயிரிடுவோருக்கு மழையையும், நோயுள்ளோர்க்குத் தேக நலத்தையும், பிள்ளையில்லாத பெண்களுக்குப் பிள்ளையையும் இவைபோன்ற பலவற்றையும் கொடுப்பதாகக் கூறவேண்டியிருந்தது. அவர்களுக்கு மோட்சம், வீடு என்பவைகளைப்பற்றித் தெரியாது. இயற்கையில் மழை பெய்யவேண்டிய காலத்தில் மழை பெய்யும்; நோய் மருந்தினல் அல்லது இயற்கையினல் குணமடையும்; மலடியும் இயற்கை சம்பந்தமாகப் பிள்ளையைப் பெறுவாள். இவை நிகழ்ந்தால் குரு இவைகள் தன்னல் நேர்ந்தனவென்று கூறக் கற்றுக்கொண்டான். இவை நிகழவில்லையாயின் அவன் கிரகங்கள்மீதும் அவர்களின் நம்பிக்கை இன்மைமீதும் பழியைப் போட்டான்.

மக்களை எவ்வளவுக்கு ஏமாற்றலாம் எனக் குரு அறிகிருனே அவ்வளவுக்கு அவன் அதிக தெய்வங்களை உண்டாக்குகிருன். மக்களின் நம்பிக்கையைப் பெறும் பொருட்டு மிகவும் சிக்கலானவும் கவற்சி அளிப்பனவுமாகிய கிரியைகளை வகுக்கின்றுன். இக் கிரியைகளால் தெய்வங்கள், இறந்தவரின் ஆவிகள், ஆறுகள், வெந்நீர்

ஊற்றுக்கள், மரங்கள், பறவைகள், விலங்குகள், பாம்புகள் எல்லாம் இக் கிரியைகளுக்கு அடங்கி நடக்கும். இப்பொழுது பத்தன் நெய், இறைச்சி, ஆடு, மது முதலியவைகள் மாத்திரமல்ல குருவின் வேலைகளுக்குத் தக்க கூலியும் கொடுக்கும்படி கேட்கப்பட்டான்.

சில நாடுகளில் குருமார் தமது சக்ராதிபத்தியத்தை நீண்ட காலம் நடத்திவந்தார்கள்; வருகின்றார்கள். அவர்களை எப்பொழுதும் சமாதானமாக ஆட்சி நடத்த விடுவது முடியாது. அதிகாரம் அளவு கடந்துவிட்டால் அதன் தீய பயன்பாட்டைத் தடுத்தல் அரிது என நாம் பழக்கத்தில் காண்கிறோம். இது குருமார் சம்பந்தப்பட்ட அளவில் ஒரு புற நடை ஆகமாட்டாது. தீவணக்கத்திலும் பார்க்க உருவ வணக்கம் குருமாருக்கு மிக வாய்ப்பு அளிப்பது. உருவ வணக்கத்தினால் கோயில்களுக்கு அரசாங்கத்துக்கு இருப்பதிலும் பார்க்க அதிகப்பட்ட சொத்துச் சேரும்; கோயில்களின் ஆதரவில் மடங்களும் தோன்றும். பொதுமக்கள் கொடுக்கும் சிறு தருமங்களையும் கோயில்கள் இழுத்துக் கொள்ளும்.

உலக மக்களைப்போலவே குருமார் மனித சமூகத்தினருக்கு நன்மை செய்தலுக்குப் பதில் தம்மைச் செழுமைப்படுத்த ஆவல் கொண்டவர்களாயிருப்பர். மக்களின் ஒழுக்கத்தை வளர்ப்பதற்கு அவர்கள் முயலுவதில்லை. சில சமயங்களில் அவர்களே ஒழுக்கக்கேடுகளை வளர்ப்பர். இது சில சமயங்களில் அவர்களின் காம இச்சையைத் தணிக்கும் வகையில் இருக்கலாம். அல்லது தம்மைப் பின்பற்றுவோரைத் திரட்டும் வகையில் ஆகலாம். அவர்கள் மறுமையில் நன்மையளிப்பதாகக் கூறுவர். மக்களின் இருண்ட துன்ப நிலையில் அவர்கள் ஒரு நம்பிக்கை ஒளி

தானும் அளிப்பதில்லை. சுருங்கக் கூறுமிடத்து அவர்கள் கொடுமையிலேயே மகிழ்ச்சி உறுகின்றனர்; நமது துன்பத்தைப் போக்குவதற்குப்பதில் துன்பங்களை அதிகப்படுத்துகின்றனர். இவர்களுடைய சமயத்துக்கும் கடவுளை அறிவதற்கும் யாதும் தொடர்பு கிடையாது. நாகரிகமடைந்த உலகுக்குத் தகுதியான ஒழுக்க முறைகளில் உயர்ந்த சமயம் உலகில் ஒன்றுவது இல்லையென்றே கூறலாம். மற்றவர்களை சமூகத்தால் தள்ளும்படி குருமாரின் நீதியில் சொல்லும் குற்றச்சாட்டுக்கள் அத்தனையும் அவர்களிடத்திலேயே காணப்படுகின்றன. ஒருவன் சமூகத்திலிருந்து விலக்கப்பட்டால், மரியாதையின்றியும், துக்கங் கொண்டாடப்படாமலும், இறந்தவிடம் தெரியாமலும் மறைந்துவிட வேண்டும். உலக சரித்திர முழுமையிலும் இரத்தவெறி கொண்டு சாதிகளை அழிவு செய்த ஒருவனைக் குருமார் சமூகத்தினின்றும் விலக்கியதாகத் தெரியவில்லை. குருத்தொழிலை தாக்கக்கூடிய செயல்கள் உண்டானபோது மாத்திரம் குருமார் விழிப்படைந்து இவ்வாறு செய்துள்ளார்கள்.

பிற்காலத்தில் இந்திய சமயபோதகர்கள் பிச்சை எடுத்து மக்கள் தமது ஒழுக்கத்தைத் தாழ்த்திக்கொள்ள அனுமதி அளித்தார்கள். இதனால் திடகாத்திரமுள்ளவர்கள் தமது வாழ்க்கைக் கடமைகளை உதறிவிட்டு பொது மக்களின் தருமத்தில் வாழ்கின்றனர். இவர்கள் திருடர் கொலையாளிகளைப் போன்று அளவிடக்கூடிய கூட்டத்தவர்களல்லர். இத்தொழில் தலைமுறை தலைமுறையாக அதிகப்பட்டு வருகின்றது.

பாக்கர்குஞ்சி என்னும் நாட்டைப் பதின்மூன்றும் நூற்றாண்டில் ஆண்ட சிற்றரசனின் வீட்டுக் கூரையில் பருந்து ஒன்று விழுந்து இறந்தது. அதனால் நேர்ந்த தீமையைப் போக்குவதற்கு கன்னேஜியிலிருந்து வைதீகப் பிராமணர் ஒருவர் அழைக்கப்பட்டார். பெருந் தொகைப் பொருட் செலவில் கிரியை செய்யப்பட்டது. வைதீகர் தனது கூலியாக ஒரு சமீனைப் பெற்றார். அது இன்றும் அவர்களின் சந்ததியாரிடம் இருந்து வருகிறது.

பிரீ பிரின்டெர்ஸ், 147, பவழக்காரத் தெரு, சென்னை 1.